# கல்கி

KALKI 15.5.94 ரு 3.00



# ஸ்ரீ கந்தசுவாமி பர்மனென்ட் பண்டு லிமிடெட்

மத்திய அரசால்
அங்கீகரிக்கப்பட்ட
**நிதி நிறுவனம்**
துவக்கம் 1990

பதிவு அலுவலகம் :
**60, சாமிபண்டாரம் தெரு**
**சிந்தாதிரிப்பேட்டை,**
**சென்னை - 600 002.**

கிளை அலுவலகம் :
**36, ஜீனிஸ் ரோடு,**
**சென்னை - 600 015.**



கந்தகோட்டம் ஸ்ரீ முத்துகுமார சுவாமி

**கனகதார முதலீட்டுத் திட்டம்**

உங்கள் குழந்தை
செல்வங்களை
**கோடீஸ்வரனாக்குங்கள்!**
**ரூ. 50,000/-**
செலுத்துவீர்.
10 ஆண்டுகளில்
**ரூ. 50,000/-ஐ** திரும்ப
பெறுவீர்!
மீண்டும் 20ம் ஆண்டு
நிறைவில் **ஒரு**
**கோடியை** பெறுவீர்!

## வெகுமதி முதலீட்டுத் திட்டம்

ஒரே ஒரு முறை ரூ. 580/- செலுத்துவீர். 252 மாதங்கள்
நிறைவில் ரூ. 40,000/- பெறுவீர்!

## பிக்சட் டிபாசிட் திட்டம்

| 46 நாள் | 90 நாள் | 6 மாதம் | 1 ஆண்டு | 2 ஆண்டு | 3 ஆண்டு | 4 ஆண்டு | 5 ஆண்டு |
|---|---|---|---|---|---|---|---|
| **13%** | **14%** | **15%** | **17%** | **18%** | **18.5%** | **19%** | **20%** |

மாத வட்டிக்கான செக்குகள் முன்கூட்டியே கொடுக்கப்படும்.
உங்கள் டிபாசிட்டுகள் 45 மாதங்களில் 2 மடங்காகிறது
90 மாதங்களில் 4 மடங்காகிறது





**பென்ஷனர் நலத் திட்டம்-வட்டி 19.5%**

வயோதிகர், விதவைகள், ஊனமுற்றோர், கல்வி
மற்றும் அறக்கட்டளை பயன் பெறலாம்.

**கடன்**

நகைகள் பேரில் கிராம் 1க்கு ரூ. 300/- வழங்கப்படும்
சென்னை மாநகரில் உள்ள சொத்துக்கள் பேரிலும் வழங்கப்படும்

**வட்டி விதம்**
**ரூ. 1.85**

H.O.: Friday Holiday
B.O.: Tuesday Holiday
Business Hours
Week Days 9.00 a.m-1.00 p.m. &
2.00 p.m. - 6.00 p.m.

பங்குதாரர்களுக்கு மட்டும்

சேர்மன் **P. பாலசுப்பிரமணியம்,** B.Sc.,
சீனியர் டிரஸ்டி
ஸ்ரீ கந்தகோட்டம்
சென்னை - 3.



சேமிப்பே செழிப்புக்கு வழிகாட்டி

**பாதுகாப்பு பெட்டகம் குறைந்த வாடகைக்கு கிடைக்கும்**

Suresh

# காது குடையுங்கள் - முழங்கையால்!



• டாக்டர் பி. குமார்



குண்டூசி, கொண்டை ஊசி முதல், கிடைத்தால் ஆகாய விமானம் வரை எதையாவது கையில் எடுத்துக் கொண்டு படு சுவாரசியமாகக் காது குடையும் 'ரசிகர்'களுக்காகச் சில வார்த்தைகள் இங்கே...

'Try to clean your ear by your elbow' என்று மருத்துவ வட்டாரத்தில் ஒரு சொல்வழக்கே உண்டு!'' என்கிறார் டாக்டர் பி. குமார்.

காதுகளின் உட்புறம் பசை மாதிரி படிந்து உறுத்துகிற சமாசாரம் பற்றிக் கேட்டோம்.

''சாதாரணமாக எல்லோருடைய காதுகளிலும் சுரக்கும் பொருள் இது. செருமன் (Serumen) என்கிற இத்திரவம் நாளடைவில் கெட்டிப்பட்டுத் திடநிலை அடைந்து 'குரும்பை'யாகக் காதுகளில் படிகிறது. இந்தச் சுரப்பு அளவோடு இருக்கும் வரை பிரச்னை இல்லை. உலர்ந்து அவ்வப்போது வெளியே வந்துவிடும். ஆனால் பத்து சதவிகிதம் பேருக்காவது இந்த ''செருமன்'' சுரப்பு வழக்கமான அளவைவிட அதிகமாக ஏற்படுகிறது. இதனால் காதுகளின் உள்ளே படிந்து கெட்டியாகிக் கற்களைப் போல் மாறி வலியை உண்டாக்கவும் கூடும். சில நேரங்களில் 'அனஸ்தீஷியா' கொடுத்துக் கூட இதை அகற்ற வேண்டிவரும்.

''சாதாரணமாக இந்த 'செருமன்' உடலுக்குப் பாதுகாப்புத் தருகிற ஒன்றுதான். காதுகளுக்குள் புகக்கூடிய நுண்ணுயிர்கள், தூசுகள் போன்றவற்றை வடிகட்டித் தேக்கிவிடக் கூடியது இது. இந்தச் சுரப்புப் பொருளில் 'லைஸோஸைம்' என்னும் பொருள் பாக்டீரியாக்களை அழிக்கக் கூடிய திறன் பெற்றது. இதன் செயல்பாட்டால் நாம் காதுகளைச் சுத்தம் செய்ய வேண்டிய அவசியம் சாதாரணமாக ஏற்படுவதில்லை. காரணம், அழுக்குப் பொருள் தானாகவே உலர்ந்து உதிர்ந்துவிடும். நாமாக அதைச் சுத்தம் செய்ய முனைந்தால் இயற்கையான பாதுகாப்புத் தன்மையைக் கெடுத்துக் கொள்ளும் வாய்ப்பே அதிகமாகிறது.

'' 'செருமன்' அதிகமாகச் சுரந்து, காதுகளின் உட்புறம் கடினமாக ஏதாவது படிந்து உறுத்துவதாக உணர்ந்தால், உடனே காது மருத்துவரை அணுகலாம். சிறு குழந்தைகள் முதல் பெரியவர்கள் வரை வயது வித்தியாசமின்றி யாருக்கும் இது ஏற்படலாம். மிகைச் சுரப்பு உள்ளவர்கள் ஆறேழு மாதங்களுக்கு ஒரு முறை மருத்துவரிடம் சென்று காதுகளைச் சுத்தம் செய்து கொள்ளலாம். நன்கு காய்ச்சி ஆற வைத்த தேங்காய் எண்ணெயை ஓரிரு சொட்டுக்கள் இடுவதன் மூலம் கெட்டிப்பட்ட குரும்பை இளகி வெளிவரவும் செய்யலாம். இதையும் டாக்டரின் ஆலோசனையின் பேரில் செய்வதே நல்லது.

''பொதுவாகக் காதுத் துளைகளுக்குள் தண்ணீர் விடுவது பாதுகாப்பானதல்ல. நீரில் இருக்கக் கூடிய கிருமிகள் உள்ளே தேங்கி ஊறு விளைவிக்கலாம். காதுகளைச் சுத்தம் செய்ய அவசியம் ஏற்படுகிறபோது, மிகவும் பாதுகாப்பான நல்ல தண்ணீரையே டாக்டர்கள் 'ஸிரிஞ்ச்' வழியே செலுத்துவார்கள். இது தொந்தரவுகளைத் தவிர்க்கும்.

''ஆண்களில் பலருக்குக் காதுத் துளைகளை ஒட்டி ரோமங்கள் வளரக்கூடும். இவை தூசு தும்புகள், நுண் கிருமிகள் உள்ளே புகுவதைத் தடுக்கக் கூடியவை.

''கூரிய பொருள்கள் மட்டுமில்லை; 'காட்டன் பட்ஸ்' என்கிற திரி வகைகள் கூடக் காதுகளுக்குப் பாதுகாப்பற்றவைதான். இவை, தாமாகவே வெளிப்படுகிற அழுக்கைக் கூட உள்ளே நகர்த்திவிடுகிற வாய்ப்பு உண்டு. கூடியவரை காதுகளை நீங்களாகவே எதைக் கொண்டும் சுத்தம் செய்யாமல் இருப்பது தான் நல்லது.''

- பாலன். பூங்குழலி

ஜானி!

''கடந்த நாற்பதாண்டுகளுக்கும் மேலாக எங்கள் குடும்பத்தோடு ஒன்றிப்போய்விட்ட ஒரு பெயர் இது. பெயர் என்பதைவிட ஒரு நபர் என்பதுதான் மிகவும் சரியானதாக இருக்கும்!'' என்கிறார் ஓவியர் மருது.

யார் இந்த ஜானி? அவர், வீட்டில் வளர்ந்து வரும் நாய்தான் ஜானி. ''நான் சிறுவனாக இருந்தபோது என் தந்தை ஒரு நாயை வளர்த்து வந்தார். அதற்கு ஜானி என்று பெயர். அதன் பிறகு நாங்கள் எந்த நாயை வளர்த்தாலும் அதற்கு ஜானி என்றுதான் பெயர். இப்படி வாழையடி வாழையாக அந்தப் பெயர் தொடர்ந்து கொண்டே

# ''இதுவும் எனக்குக்

இருப்பதால், ஜானி இல்லாமல் எங்கள் குடும்ப உறுப்பினர்களின் எண்ணிக்கை முழுமையடைவதில்லை!'' என்கிறார் மருது.

''ஒரு நாயின் ஆயுட் காலம், சுமார் பத்துப் பன்னிரண்டு ஆண்டுகள்தான் என்பதால், ஒவ்வொரு நாயும் இறக்கும்போது, சில வாரங்களுக்காவது எங்கள் குடும்பத்தில் ஒரு கனத்த சோகம் நிலவும். அதன் மரணம் இயற்கையானதுதான் என்றாலும் ஒரு குட்டிக் குழந்தையை இழந்துவிட்ட ஒரு தாயைப் போலவே, எங்கள் குடும்பத்திலுள்ள ஒவ்வொருவரும் பரிதவிப்போம்!'' என்கிறார் அவர்.

''எங்கள் குழந்தை கரோஜித் மாதிரி இவையும் எங்களுக்குக் குழந்தைகள்தான்!'' என்கிறார் திருமதி ஷீலா பாபுதாஸ். ஷீலா பாபுதாஸ் தம்பதி, கரீனா, மாண்டினா என்று இரண்டு நாய்களை வளர்க்கிறார்கள். ''சில மாதங்களுக்கு முன்பு, கரீனா குட்டிகள் போட்டபோது, எங்கள் உறவினர்களும் நண்பர்களும் நாங்கள் தாத்தா-பாட்டியாகி விட்டதாகக் கேலி செய்தார்கள் என்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!'' என்கிறார் ஷீலா.



● ஷீலா - பாபுதாஸ் குடும்பம்:
''இவையும் எங்கள் குழந்தைதான்!''



● சக்கரவர்த்தி:
''பாதுகாப்பு உணர்வைத் தரும்!''

இவர்கள் வீட்டிலிருக்கும் கரீனாவுக்கு ஒன்றரை வயது. மாண்டினாவுக்கு ஆறு மாதங்கள். கரீனா 'கிரேட் டேன்' என்கிற பிரிட்டிஷ் இனத்தைச் சேர்ந்தது. மாண்டினா ஜெர்மன் காக்கர் ஸ்பானியல் இனம்.

''கிரேட் டேன் என்னும் இனத்தைச் சேர்ந்த நாய்கள் இந்தியாவிலேயே கிடைக்கின்றன என்றாலும் நான் கரீனாவை இங்கிலாந்திலிருந்துதான் தருவித்தேன். அதற்



* கிரேட் டேன் குட்டிகள்...

# குழந்தைதான்...!''

காக நான் ஒன்றரை லட்ச ரூபாய் செலவு செய்தேன்!'' என்கிறார் பாபுதாஸ்.

ஒரு நாய்க்குட்டிக்காக இத்தனை செலவா? ''காரணம், இந்தியாவிலிருக்கும் கிரேட் டேன் இனம் நூற்றுக்கு நூறு சுத்தமான இனமாக இருக்குமா என்று எனக்கேற்பட்ட சந்தேகம்தான். ஏனெனில், நாய்களைப் பொறுத்தவரை, இனக் கலப்பு இல்லாமல் நூறு சதமும் சுத்தமான இனத்தில் பிறக்கும் நாய்க்குட்டிகளுக்குத்தான் மவுசு!'' என்கிறார் அவர்.

கரீனாவை வரவழைப்பதற்கு ஒன்றரை லட்சரூபாய் செலவு என்றால், அதை வளர்ப்பதற்காகப் பாபுதாஸ் செய்யும் தினசரிச் செலவு நூறு ரூபாய்! அது நமது மெட்ராஸ் வெயிலைத் தாங்காது என்பதால் அவ்வப்போது அதை பெங்களூருக்கும் ஊட்டிக்கும் அனுப்பி வைக்கிறார்!

''இதில் காசு பணத்தை நான் கணக்குப் பார்ப்பதில்லை. அலுவலகத்தில் - வியாபார விஷயங்களில் - எவ்வளவோ டென்ஷன் ஏற்படுகிறது. அந்த டென்ஷனோடு நான் வீட்டுக்குத் திரும்பும்போது, இந்த நாய்க்குட்டிகள் வந்து என்மேல் படுத்துப் புரண்டு விளையாடுகிறபோது எனக்குக் கிடைக்கும் அந்த ரிலீப் இருக்கிறதே... அதற்கு எந்த விலை வேண்டுமானாலும் கொடுக்கலாம்!'' என்கிறார் அவர்.

பாபுதாஸ் கூறும் இதே கருத்துக்களை மீண்டும் வலியுறுத்திக் கூறுகிறார் ஹரீன் சக்கரவர்த்தி. ''மனம் இலேசாவது மட்டுமல்ல; நாய்கள் கொடுக்கும் பாதுகாப்பு உணர்வை, எத்தனை மனிதர்கள் இருந்தாலும் நமக்குக் கொடுத்துவிட முடியாது!'' என்கிறார் அவர்.



* டாக்டர் அமல்ராஜ்: ''மருத்துவப் பரிசோதனை அவசியம்!''

ஆனால், இது மாதிரியான உயர்ந்த இன நாய்களைப் பராமரிக்க ஆகும் செலவைச் சாதாரணக் குடும்பங்களால் சமாளிக்க முடியுமா?

''ஏன் முடியாது?'' என்று கேட்கிறார் சித்தார்த். இவர் இரண்டு டாபர்மென் நாய்களை வளர்த்துக் கொண்டிருக்கிறார். ஓர் ஆண்; ஒரு பெண். பெண்ணுக்குப் பேறுகாலம் நெருங்கிக் கொண்டிருப்பதால், அது குட்டி போடுவதற்கு வசதியாக மரத்தாலான கூண்டு ஒன்றைத் தயாரிப்பதில் மும்முரமாக ஈடுபட்டிருக்கிறார்.

''வசதியுள்ளவர்கள் தங்கள் செல்ல நாய்களுக்குக் கேக் கொடுத்தால், வசதியில்லாதவர்கள் பொறை வாங்கிப் போடுவார்கள். தங்கள் எஜமானர்கள் தங்களுக்குத் தரும் ஆகாரங்களை அன்போடு தருகிறார்களா என்றுதான் நாய்கள் கவனிக்கின்றனவே தவிர, அவை, கேக்குக்கும் பொறைக்கும் வித்தியாசம் பார்த்து விகவாசம் காட்டுவதில்லை என்பதுதான் எனது அனுபவம்!'' என்கிறார் சித்தார்த்.

''பெரும்பாலும் டாபர்மென் நாய்கள் அசைவ உணவுதான் சாப்பிடும். எங்கள் குடும்பம் சைவம். அதனால், குட்டிகளை வாங்கி வந்ததிலிருந்தே நாங்கள் அவற்றுக்குச் சைவ உணவையே பழக்கப்படுத்தினோம். இப்போதும் அவை சைவம்தான். அதனால், அவற்றின் வளர்ச்சியிலோ விகவாசத்திலோ சிறிதும் குறைந்து போய்விடவில்லை!'' என்கிறார் அவர்.

**தி**ருமதி மணிமேகலை ராகவனின் அனுபவம் வித்தியாசமானது.

''எங்கள் மூத்த பெண் ரஷ்யாவுக்குப் படிக்கச் சென்றபோது, ஓர் அமெரிக்கன் காக்கர் ஸ்பானியல் குட்டியை வளர்க்க ஆரம்பித்தாள். அங்கு அது அசைவம் பழகிவிட்டதால், இங்கே கொண்டு வந்த பிறகும் நாங்கள் சைவம் என்பதற்காக, அதன் பழக்கத்துக்குத் தடையாக இருக்க விரும்பவில்லை. எங்களுக்காக முட்டையைக்கூட சமைத்துக் கொள்ளாத நாங்கள், எங்கள் பிரின்ஸிக்காக மாட்டு மாமிசம் வாங்கிச் சமைத்துப் போடுகிறோம்!'' என்கிறார் அவர்.

இவருடைய பிரின்ஸி, சென்ற ஆண்டு நடந்த நாய்க் கண்காட்சியில் சிறந்த நாய்க்கான பரிசையும் கோப்பையையும் வாங்கியது குறித்து ரொம்பவும் பெருமையோடும் சந்தோஷத்தோடும் சொல்கிறார். ''இதற்காக நாங்கள் அதிகபட்சம் மாதம் நூறு ரூபாய் அளவுக்குத் தான் செலவு செய்கிறோம். இதுவொன்றும் பெரிய செலவே அல்ல!'' என்கிறார் திருமதி மணிமேகலை.

**சா**தாரணமாக நல்ல இன நாய்க்குட்டிகளின் விலை சுமார் அறுநூறு ரூபாயிலிருந்து இருபதாயிரம் ரூபாய் வரை இருக்கிறது. சாதாரண பொமரேனியன் குட்டி விலைதான் அறுநூறு ரூபாய்.

''இந்த விலைகளைக் கொடுப்பதற்கு ஒருவர் தயாராக இருக்கிறார் என்பதனாலேயே என்னைப் போன்றவர்கள் எங்கள் வீட்டு நாய்கள் போடும் குட்டிகளை விலைக்குக் கொடுத்துவிடுவதில்லை!'' என்கிறார் பாரத் கென்னல் கிளப்பின் செயலாளர் பாபுதாஸ்.

பின் யாருக்குத்தான் கொடுப்பார்கள்? ''முதலில் அவர்கள் வசதியை மட்டுமே நாங்கள் பார்ப்பதில்லை. அவர்கள் அன்போடு வளர்ப்பார்களா என்றுதான் பார்க்கிறோம். எங்கள் கரீனா ஐந்து குட்டிகள் போட்டது. ஒவ்வொரு குட்டியும் இருபதாயிரம் ரூபாய்வரை விலைபோனது. இந்த நிலையில் ஒரு குட்டியை ஒருவருக்கு இலவசமாகவே கொடுத்தேன். காரணம், அந்தக் குடும்பத்தாருக்கு நாய்களின் மேலுள்ள அன்பு முழுமையானது என்பதை நான் புரிந்து கொண்டதுதான்!'' என்கிறார் பாபுதாஸ்.

சாதாரணமாகத் தமது மகள்களைத் திருமணம் செய்து கொடுத்த ஒரு தந்தை, அவ்வப்போது தமது மகள்கள் புகுந்த வீடுகளில் சந்தோஷமாக இருக்கிறார்களா என்று சென்று பார்த்து வருவதுபோல்தான் இவர்களும், தங்கள் குட்டிகளைக் கொடுத்த பிறகு, அவ்வப்போது போய்ப் பார்த்து வருகிறார்கள்; டெலிபோனில் விசாரித்துக் கொள்கிறார்கள். ''என் கரீனாவின் குட்டியொன்று டைட்டன் வாட்ச் கம்பெனியின்

● சித்தார்த்: ''அன்புதான் முக்கியம்!''





* திருமதி மணிமேகலை: "நாய்க்காக அசைவம் சமைக்கிறோம்!"

சேர்மன் வீட்டில் ஒரு ராணியைப் போல் வளர்வதைப் பார்க்கும்போது, என் மனம் பூரித்துப் போகிறது!'' என்கிறார் பாபுதாஸ்.

சரி, உண்மையிலேயே ஒருவருக்கு நாய் வளர்க்க ஆசை. ஆனால் அவருக்கு நாயின் வகைகள் பற்றி ஒன்றுமே தெரியாது. இந்த நிலையில், அவர் எப்படி ஓர் உயர்ந்த இன நாய்க்குட்டியைத் தரம் பார்த்து வாங்க முடியும்?

''அப்படிப்பட்டவர்களுக்கு உதவி செய்வதற்காகத்தானே, எங்கள் பாரத் கென்னல் கிளப் இருக்கிறது. எங்களிடம் உங்கள் தேவைகளைச் சொன்னால், உங்கள் வசதிக்குத் தகுந்தபடியான நாய்க் குட்டிகளை நாங்கள் உங்களுக்குக் காட்டுவோம்; வாங்கித் தருவோம். அவற்றை எப்படியெல்லாம் வளர்க்க வேண்டும் என்பது பற்றியும் எடுத்துச் சொல்லி வழி காட்டுவோம்!'' என்கிறார் பாபுதாஸ்.

''இது மாதிரியான நாய்க் குட்டிகளை வாங்கும்போதே அவற்றுக்கு முதல் முறையாகப் போடப்படும் தடுப்பூசிகளையும் போட்டே தருவோம். பிறகு அடுத்த முறை எப்போது போடப் பட வேண்டும் என்பதற்கான தேதிகளையும் ஒரு கார்டில் குறித்துத் தந்து விடுவோம்!'' என்கிறார் டாக்டர் அமல்ராஜ்.

''அடுத்தமுறை அவர்களால் நாய்க் குட்டிகளைக் கிளினிக்குக்குக் கொண்டு வந்து தடுப்பூசிகள் போட முடியாத ஒரு சூழ்நிலை ஏற்பட்டாலும் பிரச்னையில்லை. மருந்துச் செலவோடு கூடுதலாக இருபத்தைந்து ரூபாயைப் போக்குவரத்துச் செலவுக்காக வாங்கிக் கொண்டு, நாங்களே அவர்களின் இருப்பிடங்களுக்குச் சென்று போட்டுவிட்டு வருவோம்!'' என்கிறார் அவர். ''மனிதர்களைப்போல் அவற்றுக்கும் டானிக்குகள் இருக்கின்றன. அவற்றையும் கொடுப்பது மிகமிக அவசியம்!''

நாய்களுக்கு உடற்பயிற்சிகளும் தேவை. இல்லையென்றால் தொந்தி விழுந்து அவற்றின் அழகே கெட்டுவிடுமாம்!

''இதுபோன்ற அடிப்படை விஷயங்களையெல்லாம் குட்டிகளை வாங்கும்போதே நாங்கள் அவர்களுக்குச் சொல்லிக் கொடுத்துவிடுவோம். சிலர் ஆண் நாய்க் குட்டிதான் வேண்டும் என்று கேட்பார்கள். 'பெண் நாய் எனில் குட்டி போடும்; தொந்தரவு' என்றெல்லாம் எண்ணுவார்கள். ஆனால், அந்தக் குட்டிகளை நல்ல



* அமெரிக்கன் காக்கர் ஸ்பானியல்...

விலைக்கு வாங்கிக் கொள்ளப் பலரும் தயாராய் இருப்பார்கள். அந்தத் தொகை அந்த நாயைப் பராமரிக்க ஆகும் செலவை ஈடுகட்டி விடுமல்லவா! இதையெல்லாம் எடுத்துச் சொல்லிப் புரிய வைப்போம்!'' என்கிறார் டாக்டர் அமல்ராஜ்.

நாம் டாக்டர் அமல்ராஜிடம் பேசிக் கொண்டிருக்கும்போது ஒரு போன்கால். (அந்த போனில் ரிசீவரைக் கையிலெடுக்காமலே ஒரு ஸ்விட்சைத் தட்டிவிட்டு எதிர் முனைக்காரரோடு பேசலாம்) ''டாக்டர், எங்க பிளாக்கி காலையிலேர்ந்தே எதுவும் சாப்பிட மாட்டேங்குது. என்னன்னே தெரியலை... நீங்க உடனே வந்து பாருங்க டாக்டர்... பிளாக்கியப் பார்த்தா பாவமா இருக்கு டாக்டர்...ப்ளீஸ் டாக்டர்...'' என்று ஒரு சிறுமியிடமிருந்து வேண்டுகோள்.

''எம்மா.... அதை கிளினிக்குக்குக் கொண்டு வாயேன்....! நான் பார்க்கிறேன்...''

''இல்ல டாக்டர். அதை டிஸ்டர்ப் பண்ண பாவமா இருக்கு டாக்டர்! டாக்டர்... நீங்களே வாங்களேன்!'' என்று கெஞ்சுவது போல் பேசுகிறாள் எதிர்முனைச் சிறுமி.

அடுத்து, இன்னொரு போன். ''டாக்டர், இது வரைக்கும் அஞ்சு குட்டி போட்டுடுத்து. இனியும் குட்டியிருக்கா இல்லையான்னு தெரியலை...உடனே வாங்க டாக்டர்...'' என்று இன்னோர் அம்மாள் டாக்டரை அவசரமாய் அழைக்கிறார்.

''பார்த்தீர்களா! சொந்தப் பெண்ணுக்குப் பிரசவம் போல் பரிதவிக்கும் அன்பு உள்ளத்தை!'' என்றவாறே புறப்படத் தயாராகிறார் டாக்டர் அமல்ராஜ்.

– இளங்கோவன்

அட்டையில்: சுரோஜித், மாண்டினாவுடன் திருமதி ஷீலா பாபுதாஸ்.

அட்டை வண்ணப்படமும், படங்களும்: கோபிநாத்

# ஆயுள் கைதி மண்டேலா அதிபர் ஆகிறார்!

மகாத்மா காந்தியின் 'ஆரம்ப' கால சரித்திரத்தை அறிந்தவர்கள், அல்லது குறைந்த பட்சம் ரிச்சர்ட் அட்டன்பரோவின் 'காந்தி' திரைப் படத்தைப் பார்த்தவர்கள், தென்னாப்பிரிக்காவில் நிறவெறிக் கொள்கையை எதிர்த்து அவர் எப்படிப் போராட வேண்டியிருந்தது என்று புரிந்து கொண்டிருப்பார்கள்.



* [illegible] [illegible] ஆட்டம்பாட்டத்தில் கலந்து கொண்ட குழுக்களில் ஒன்று

பெரும்பான்மைக் கறுப்பர் இனத்தவர் ஆள முடியாது. ஏன், வோட்டுக்கூடப் போட முடியாது. காந்தி போனால் என்ன? அந்த இடத்தில் ஒரு நெல்சன் மண்டேலா, சிறுபான்மை வெள்ளை இனத்தவரின் ஆட்சியை எதிர்த்துப் போராடினார். அவரையும் சிறையில் அடைத்தது தென்னாப்பிரிக்க அரசு.

உலக நாடுகள் பலவும் தென்னாப்பிரிக்காவைக் கடுமையாகத் தாக்கின, அங்கு கடைப்பிடிக்கப் பட்ட நிறவெறிக் கொள்கைக்காக. அந்த நாட்டின் மீது வர்த்தகத் தடை விதித்தன; ராஜீய உறவு வைத்துக் கொள்ள மறுத்தன.

'90 ல் தான், சற்று விவேகமுள்ள அதிபர் டி கிளார்க், நிலைமையைப் புரிந்து கொண்டவராய், மண்டேலாவை விடுதலை செய்தார்; அவர் கட்சியான ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் மீதிருந்த தடையையும் விலக்கினார்.

அதன் பிறகு, அதிபர் டி கிளார்க்குக்கும், நெல்சன் மண்டேலாவுக்கும் சமாதானத்துக்கான நோபல் பரிசைப் பகிர்ந்தளித்த சம்பவம், சரித்திரமாகியது.

அடுத்த கட்டம் என்ன?

தேர்தல் வைக்க வேண்டும்.

வெள்ளையரின் சிறுபான்மை ஆட்சிக்கு முடிவு கட்டி, பெரும்பான்மைக் கறுப்பர் இன மக்களின் கனவை நனவாக்கி, ஆட்சிப் பொறுப்பு அவர்கள்

* டி கிளார்க்



* புத்தெலெஸி





● நெல்சன் மண்டேலா

தலைவரான நெல்சன் மண்டேலா கைக்கு வர வேண்டும்.

சுமார் நான்கு வருடங்களுக்கு முன்னால் நினைத்துக் கூடப் பார்க்க முடியாத, இந்தச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த தேர்தல்தான், இப்போது தென்னாப்பிரிக்காவில் நடந்து முடிந்திருக்கிறது. அதனால்தான், சுமார் ஆறாயிரம் பத்திரிகை நிருபர்களும், புகைப்படக்காரர்களும் ஜோஹனஸ்பர்க்கில் வந்து குவிந்தார்கள்.

வாழ்நாளில் முதல் முறையாக வோட்டுச் சாவடிக்கு வந்து, விடியலின் முதல் கிரணம் விழும் போதே வரிசையில் நிற்கத் தொடங்கினார்கள் மக்கள்.

மூன்று நாட்கள் நடப்பதாயிருந்த தேர்தல், நான்காவது நாளுக்கும் நீட்டிக்கப்பட்டது. காரணம், வோட்டுப் போட இன்னும் லட்சக் கணக்கான வாக்காளர் காத்திருந்தார்கள்.

நம் ஊர் சேஷன் மாதிரி, அங்கேயும் ஒரு சுதந்தர தேர்தல் கமிஷனர்: நீதிபதி ஜோஹன் க்ரீக்ளர். கூடுமானவரை அமைதியாகத் தேர்தல் நடத்த அவர் நினைத்திருந்தாலும், அரை டஜன் குண்டு வெடிப்புகளும், நூற்றுக்கு மேற்பட்ட மரணங்களும் தவிர்க்க முடியாதவையாகிவிட்டன. கறுப்பர் இனத்தவர் ஆட்சியைக் கைப்பற்றி நம்மை ஆளுவதா என்று பொறுக்காத, சிறுபான்மை வெள்ளையர் சிலரின் வெறித் தாக்குதலே காரணம்.

தேர்தலில் பிரதான கட்சி, நெல்சன் மண்டேலாவின் ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ்தான். அவரை எதிர்த்து, டி க்ளார்க்கின் நேஷனல் பார்ட்டி. தவிர, ஆரம்பம் முதலே மண்டேலாவுக்குத் தலைவலி தந்து கொண்டிருந்த ஜுலு பழங்குடி இனத் தலைவர் புத்தலெஸியின் இன்காதா விடுதலைக் கட்சி. இவர் தென்னாப்பிரிக்க ஜுலு இன அரசர் குட்விங் ஸ்வெல்தினியின் மருமான்.

தேர்தலுக்குத் தேதி எல்லாம் கூடக் குறித்த பிறகு, 'தேர்தலில் கலந்து கொள்ள மாட்டேன்' என்று ஒரு திடீர் முட்டுக்கட்டை போட்டார் புத்தலெஸி. மண்டேலாவும், டி க்ளார்க்கும், அவர் தாடையைப் பிடித்துக் கொண்டு கெஞ்சாத குறைதான். மனிதர் மசியவே இல்லை. நேட்டால் மாகாணப் பகுதியான க்வா-ஜுலுவுக்குத் தன்னாட்சி உரிமை தந்தால் ஒழிய, தமது இன்காதா கட்சி, தேர்தலில் போட்டியிட முடியாது என்று பிடிவாதம் பிடித்தார். ஜுலு மன்னரிடம் போய் முறையிட்டார் மண்டேலா. மருமானிடம் பேசுவதாகச் சொன்னார் மன்னர். புத்தலெஸி இணங்கவே இல்லை. இனி நம்பிக்கையே இல்லை என்ற நிலை, தேர்தலுக்குச் சுமார் ஒரு வாரம் இருக்கும் போது உருவாகியிருந்தது!

அப்போது வந்து சேர்ந்தார் பேராசிரியர் ஒருமு. உலக நாடுகளில் எங்கே எல்லாம் இப்படி இக்கட்டான நிலை உருவாகிறதோ, அங்கே போய்ப் பேச்சு வார்த்தை மூலம் எப்படியாவது ஒரு முடிவு காணும் சர்வதேசக் குழு ஒன்று இருக்கிறது. அதன் தலைவர் டாக்டர் ஹென்றி கிஸிஞ்சர். (இதில் நம் நாட்டு நீதிபதி ஜஸ்டிஸ் பகவதியும் உண்டு.) இதில் ஓர் உறுப்பினர்தான் ஒருமு. பேராசிரியர் தமது சாமர்த்தியத்தை எல்லாம் காட்டி, எப்படியோ புத்தலெஸியைச் சம்மதிக்க வைத்ததுதான் சாதனை.

வாக்குச் சீட்டில் ஜுலு இன்காதா கட்சியின் பெயரும், சின்னமும், வேட்பாளரின் பெயரும் ஸ்டிக்கர் அடித்து ஒட்ட வேண்டி வந்தது!

ஸ்டிக்கர்கள் கட்டிய வாகனங்களின் அலறல்கள் எல்லாம் கிடையாது. சுவர்

களை நாசப்படுத்தல் இல்லை; பேனர்கள் இல்லை. கட்-அவுட்களும் கிடையாது. பின்னே?

தேர்தல் கூட்டங்கள் எல்லாமே பிரும்மாண்டமான ஸ்டேடியங்களில்தான். பேச்சு ஆரம்பிப்பதற்கு முன்னால், ஆட்டம் போட வைக்கும் கோலாகலமான இசை. கிட்டத்தட்ட பிக்னிக்தான்!

முதல் நாளன்று வயதானவர்கள், நோயாளிகள், உடல் ஊனமுற்றவர்கள் எல்லாரும் வோட்டுப் போட்டார்கள்.

இந்தத் தேர்தலில் இன்னொரு விசேஷம் :

நியூஸிலாந்தில் இருக்கும் 12,000 தென் ஆப்பிரிக்கர்கள், அவர்கள் ஊரிலேயே வோட்டுப் போடலாம். அது போல, ஆஸ்திரேலியாவில் இருக்கும் 60,000 தென் ஆப்பிரிக்கர் வோட்டுப் போட என்றே 19 வோட்டுச் சாவடிகள்.

தேசிய அசெம்பிளிக்கு மொத்தம் 400 இடங்கள். சமீபத்திய செய்திகளின் படி, நெல்சன் மண்டேலாவின் ஆப்பிரிக்க தேசிய காங்கிரஸ் சுமார் அறுபது சதவிகித இடங்களைப் பிடித்திருப்பதாகவும், அடுத்தபடியாக டி கிளார்க்கின் நேஷனல் பார்ட்டி வந்திருப்பதாகவும் தெரிகிறது. விகிதாசார முறையிலான தேர்தல் என்பதால், நெல்சன் மண்டேலா அதிபராகவும், டிகிளார்க் துணை அதிபராகவும் இனி தென் ஆப்பிரிக்காவின் ஆட்சி பீடத்தில் அமருவார்கள். ஆயுள் கைதியாகச் சிறையில் அடைக்கப்பட்டிருந்த மண்டேலா, 27 வருடங்களுக்குப் பின் விடுதலை பெற்று வெளியே வந்த நாலு வருடங்களில் நாட்டின் அதிபர்!

ஜுலு அரசருக்கு, இங்கிலாந்தின் எலிஸபெத் ராணியாரைப் போன்ற அந்தஸ்து கிடைக்கும்.

அறுபத்தைந்து வயதாகிவிட்ட நெல்சன் மண்டேலாவால், கட்சியைக் கட்டிக் காப்பாற்றி ஆட்சியையும் மக்களின் எதிர்பார்ப்புக்குக் குறைவில்லாமல் நடத்த முடியுமா? சற்றுச் சிரமமான காரியம்தான். சங்கடங்களும், சவால்களும் நிறைந்ததும் கூட... ஜுலு தலைவர் புத்தலெஸியை மட்டுமல்ல, ஆத்திரத்தில் செயல்படும் சிறுபான்மை வெள்ளையினத்தவரின் வெறியாட்டங்களையும் முறியடித்தாக வேண்டும்.

நாட்டின் பொருளாதாரத்தை நிர்ணயிக்க வேண்டும். சீன பிரதமர் லீ பெங்கைச் சந்தித்த போது, 'சோஷலிஸம் கேஷலிஸம் என்று பேசி மாட்டிக் கொள்ளாதீர்கள்!' என்று மண்டேலாவை எச்சரித்தாராம். தனியார் துறையும், அரசுத் துறையும் இணைந்த கலப்புப் பொருளாதார முறையைத்தான் மண்டேலா கையாளுவார் என்று தெரிகிறது.

ஆப்பிரிக்க தேசிய காங்கிரசின் முன்னணி உறுப்பினரும், மண்டேலாவின் மனைவியுமான வின்னி மண்டேலாவுக்கும், தமக்கும் இடையே உருவான மனவேற்றுமை காரணமாக, அவரைத் தம் வாழ்க்கையிலிருந்தே விலக்கி வைத்தார் நெல்சன் மண்டேலா. வின்னி, மண்டேலாவுடன் தேர்தல் பிரசாரம் எதிலும் கலந்து கொள்ளவில்லை என்பது குறிப்பிடத்தக்கது. ஆனால் மண்டேலா காழ்ப்புணர்ச்சி எதையும் வெளிக்காட்டவில்லை. ''வின்னி ஆப்பிரிக்க தேசிய காங்கிரசின் முன்னணித் தலைவர்களில் ஒருவர்!'' என்கிறார் பெருந்தன்மையுடன்.

டி கிளார்க்கிடம், 'மறப்போம் மன்னிப்போம்!' என்று மண்டேலா சொன்னார்.

இப்படி ஒரு தலைவர் கிடைக்க, தென் ஆப்பிரிக்க மக்கள் நிச்சயம் புண்ணியம் செய்திருக்க வேண்டும்.

– சாருகேசி

---

## பிறந்தநாள் சிந்தனை – போட்டி முடிவு

காலச் சக்கரம் சுழன்று

கொண்டிருக்கிறது

**என்ற சரியான விடையை எழுதிய 65 வாசகர்களிடையே குலுக்கல் நடத்தினோம். தலா ரூ. 25/- பரிசு பெறும் பத்துப் பேர்களின் பெயர், முகவரி :**

1. ஆர். ஜெயந்தி, 1, கருணாநிதி சாலை, 7 வது குறுக்குத் தெரு, விசாலாக்ஷி நகர், சந்தோஷபுரம், சென்னை - 73; 2. வி. கிருஷ்ணன், 2/181, ஏ.ஜி.எஸ். காலனி, கொட்டிவாக்கம், சென்னை - 41; 3. கே. மணிகண்டன், 3/55, தெற்குத் தெரு, இராஜாக்கமங்கலம், குமரி மாவட்டம் - 629 503; 4. ஆர். ராமதாஸ், 8, சுப்பிரமணியன் தெரு, ராஜாஜி நகர், சென்னை - 600 049; 5. மாலதி வேங்கடேசன், 22/10, வேலு தெரு, மேற்கு மாம்பலம், சென்னை - 600033; 6. ஏ.எல். ரங்கராஜன், பிளாக் 12, எல், தமிழ்நாடு வீட்டு வசதி வாரியம் (எல்.ஐ.ஜி.) திருவள்ளுவர் நகர், தண்டையார் பேட்டை, சென்னை - 600081; 7. சார்லஸ், வி.ஜி. II, அகில இந்திய வானொலி நிலையம், திருநெல்வேலி - 627 002; 8. செ. பராந்தகன், 20/3, ராஜு பாளையம் தெரு, அம்பிகா காப்பி காலனி, பட்டுக்கோட்டை; 9. ஆர். தையல்நாயகி அம்மாள், வி.ஏ.ஜி. இல்லம், ஆஞ்சநேய கல்யாண மண்டபம் எதிரே, கன்யாகுளம் சாலை, விழுப்புரம் - 605 602; 10. லக்ஷ்மி ராமன், C1, சபரி அபார்ட்மெண்ட்ஸ், 10 வது அவென்யு, அசோக் நகர், சென்னை - 600 083.

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

# Kalki Shopping Page

சிற்றுண்டிப் பிரியர்களே
வாருங்கள்!
வந்து எங்கள்
ஹோட்டல் கற்பகம்
ரெஸ்டாரெண்ட்டின்
அறுசுவை
உண்டிகளைச்
சுவைத்துப் பாருங்கள்!

**ஹோட்டல்
கற்பகம்
ரெஸ்டாரண்ட்**

19, தெற்கு மாட வீதி,
மைலாப்பூர்,
சென்னை - 600 004.
தொலைபேசி : 72388; 72398

---



நாணயமான
விலையில்

ஒரிஜினல் ஹைதராபாத்
முத்துக்கள், முத்து
மாலைகள், வளை
யல்கள், காதணிகள்,
அமெரிக்கன்
டைமண்ட் சில்வர்
நகைகள், நகைக்
கற்கள், பிறந்த நாள்
கற்கள்..

ரூ. 1000 க்கு மேல் வாங்கினால்
10% சிறப்பு தள்ளுபடி.

ரூ.100 முதல் ரூ.500 வரைக்கான
எங்களின் தவணை முறைத்
திட்டங்களில் சேர்ந்து சுலபமாக
நகைகளை வாங்க முடியும். மேலும்
எங்களின் முத்து வளையல்களை
கூடுதல் சிறப்புப் பரிசாக பெற
உடனே அணுகுவீர்.

**ஸ்ரீ ஜகந்நாத் ஜெம்ஸ்
'N' ஜுவல்ஸ்**



36, தெற்கு உஸ்மான் ரோடு,
தி.நகர் பஸ் ஸ்டாண்ட்
அருகில்,
சென்னை - 600 017.

---



**ஸ்ரீ அகத்தியர் நாடி
சோதிட நிலையம்**

சோதிடர் : க. மதியழகன்
(வைதீஸ்வரன் கோயில்)

பழங்கால ஓலைச் சுவடிகளின்
மூலமாக கல்வி, தொழில்,
உத்யோகம், திருமணம், ஆகிய
நன்மைகளையும், கடன், வழக்கு,
வியாதி, எதிரிகளாகிய
தீமைகளையும் இவற்றின்
நிவர்த்தியும் படித்து எழுதி
தரப்படும்.

ஜாதகம் இல்லாதவர்களுக்கு கை
பெருவிரல் ரேகையைக் கொண்டு
ஜாதகம் எழுதி தரப்படும்.

M-C- ADS.

57, பிருந்தாவனம் ரோடு,
பேர்லேண்ட்ஸ், (சாரதா
கல்லூரி எதிரில்), சேலம் - 636 016.
போன் : 449397, STD - 0427

---

**ஸ்ரீ அன்னை அருள்**
(தெய்வீக மாத இதழ்)

இம்மாத இதழ்
விற்பனையாகிக்கொண்டிருக்கிறது....
கொல்லூர் மூகாம்பிகை.
ராஜமன்னார்குடி ராஜகோபாலன்.
சிறுவர்களுக்கு கீதைக் கதைகள்.
ஒப்பிலா அப்பன் - ஸ்ரீ வேங்கடாசலபதி.
வரலாறு படைக்கும்
பிள்ளையார் பட்டி விநாயகர்.
வக்கரங்களைத் தீர்த்து வைக்கும்
வக்கரகாளி.
ஜோதிடம்.
இன்னும் பல அரிய விஷயங்கள்.

ஏஜன்ஸி இல்லாத ஊர்களுக்கு
தொடர்பு கொள்ளவும்:
**ஸ்ரீ அன்னை அருள்**
9/4, அஜீஸ் முல்க் 7வது தெரு,
ஆயிரம் விளக்கு,
சென்னை - 600 006.
தொ. பேசி. எண். 827 8762.


நீங்கதான் மக்கள் தலைவர்... என்னா அறிவு, நிர்வாகத் திறன்... ராஜதந்திரம், பெரிய மனசு... எல்லாம் ஸ்டெத்லேயே பக்காவாத் தெரியுதே!...
சரி சரி, குடும்ப டாக்டரா இருந்து தொலையுங்க!
சூரியனை மறைச்சுட்டேன், மறைச்சுட்டேன்...
கோபால் சாமி
சின்னத்தை முடக்க முயற்சி
நல்லா மறைச்சே, போ!
சேஷன்
நீங்க ஊன்றின சத்யாக்ரக விதைதான் வளர்ந்து இப்ப கறுப்பர்கள் ஆட்சிக்கு வழி வகுத்திருக்கு...
மண்டேலா
காந்திஜி
ஆமாமா... இந்தியாவில கூட நான்தான் சுயாட்சிக்கு வழி வகுத்தேன்... என்ன பிரயோஜனம்? ஹூம்!.....



# கல்கி



1994
மே 15
மலர்: 52
இதழ்: 42
பவ
வைகாசி 1

தமிழ்த்திருநாடு
தன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி
பாப்பா. - பாரதியார்.

## மாறிய மனமா? மாறுவேடமா?

நாடெங்கும் பல்வேறு கட்சிகளிடையே உட்பூசல், பிளவு என்று ஏற்பட்டு வரும்போது, பஞ்சாபில் அகாலிகளின் ஆறு பிரிவினர் ஒன்றிணைந்து ''சிரோமணி அகாலிதளம்''என்ற புதிய கட்சியைத் தோற்றுவித்திருப்பது நியாயமாக மகிழ்ச்சியையே அளிக்க வேண்டும். ஆனால் இந்த ஒற்றுமை, சந்தோஷத்துக்குப் பதில் சந்தேகத்தையே உருவாக்கியிருப்பதற்குக் காரணம் உண்டு. ''காலிஸ்தான்'' என்று கோஷமிட்டு, பயங்கரவாதத்தைக் கட்டவிழ்த்து விட்டிருந்த பஞ்சாபில், இன்று தீவிரவாதிகள் ஒடுக்கப்பட்டு அமைதி திரும்பியிருக்கிறது. ஜனநாயக முறையில் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆட்சி நடக்கிறது. இந்தச் சமயத்தில் புதிய கட்சியானது, ''சீக்கியர்களுக்கென்று ஒரு தனி பிரதேசம், அவர்கள் சுதந்திர ஒளியை அனுபவிக்கக்கூடிய வகையில் உருவாக வேண்டும்'' என்று தன் இலக்கை அறிவித்துள்ளது. இது, 'மாறுவேடத்தில் வரும் காலிஸ்தான் கோரிக்கைதானோ' என்ற ஐயப்பாட்டை எழுப்புகிறது! பல்வேறு வித விளக்கவுரைகளுக்கு இடமளிக்காமல் புதியகட்சி தன் எதிர்பார்ப்பு என்ன என்பதைத் தெளிவு படுத்த வேண்டும். இந்திய அரசியல் சட்டத்துக்கு உட்பட்டு மாநிலங்களுக்கு அதிக அதிகாரங்கள் என்பது கோரிக்கையானால் அதனைக் கரவொலி செய்து வரவேற்கலாம். பிரிவினை வாதம்தான் என்றால் அதனை நாடுமுழுமையும் எதிர்க்கும்.

காங்கிரஸைப் பொறுத்தமட்டில் அகாலிதளம் பிளவு பட்டிருந்தால் தேர்தலில் வெற்றி பெறுவது ஓரளவுக்கு வசதி. அகாலி ஒற்றுமை, தேர்தலைச் சந்திப்பதைக் காங்கிரஸுக்குக் கடினமாக்கும். இது காரணமாகப் புதிய சிரோமணி அகாலிதளத்தை அவதூறாகப் பேசி விடாமல், அதன் உண்மையான சொரூபத்தை அறிந்து கொள்ள மத்திய அரசு முயற்சி எடுக்க வேண்டும். நம்பாமலிருக்கவும் கூடாது; நம்பி ஏமாந்து விடவும் கூடாது! ராஜதந்திரம் முன் எப்போதையும்விட அதிகத் தேவை.

## எம்.எல்.ஏ.க்கு ரூ.10,000; அமைச்சருக்கு ரூ.20,000!

தமிழக எம்.எல்.ஏக்களுக்குச் சம்பள உயர்வையும் கூடுதல் சலுகைகளையும் நிதி அமைச்சர் அறிவிக்க, எம்.எல்.ஏக்கள் தங்களுக்குத் தாங்களே இவற்றை வழங்கிக் கொண்டு சட்டமன்றத்தில் வோட்டளித்தார்கள். தவிர டி.வி., அந்தரங்கக் காரியதரிசி போன்ற புதிய கோரிக்கைகளையும் முன் வைத்தார்கள். எதிர்ப்பு என்ற பேச்சுக்கே இடமில்லை! எல்லாக் கட்சியினரும் ஒற்றுமை உணர்வோடு ஏகமனதாகச் சம்பள உயர்வை வரவேற்று மகிழ்ந்தார்கள்.

இதற்குப் பிறகும்கூட புதிய விகிதங்களின்படி எம்.எல்.ஏக்களுக்கு ஒட்டு மொத்தமாக மாத வருமானம் ரூ.4000 கிடைப்பது என்பது மிகவும் குறைவுதான் - அதுவும் விலைவாசிகள் எக்கச்சக்கமாக உயர்ந்துள்ள இந்த நாட்களில். ஒப்பு நோக்க, தொழிற்சங்க அமைப்பு உள்ள துறைகள் பலவற்றில் அதிகாரிகள் இதைவிட அதிகச் சம்பளம் - சலுகை பெறுகிறார்கள். அமைச்சர்களுக்குப் புதிதாக நிர்ணயிக்கப்பட்டுள்ள சம்பளம் ரூ.4500 என்பதும் தரித்திரபட்சம்தானே தவிர, தாராளம் என்று கூறி விட முடியாது. இதர சலுகைகளும் அப்படியே.

இப்படி கருமித்தனமாக சம்பளம் நிர்ணயிப்பதால்தான் அமைச்சர்கள், எம்.எல்.ஏக்கள் மீது லஞ்ச ஊழல் புகார்கள் எழுகின்றனவோ என்று கூட எண்ணத் தோன்றுகிறது. எம்.எல்.ஏக்களுக்கு ரூ.10,000, அமைச்சர்களுக்கு ரூ.20,000 என்று நிர்ணயித்து விடலாம், தாராளமாக. 'அப்படிச் செய்து விட்டால் லஞ்ச ஊழலே இராதா?' என்றால் பதில் இல்லை. 'ஐயோ பாவம்' என்ற பரிதாபமாவது மக்கள் மனத்தில் எழாதில்லையா? ''இருபதாயிரம் ரூபா சம்பளம் வாங்குறே; இதுக்குமேலே லஞ்சம் ஒரு கேடா?'' என்று தட்டிக் கேட்கத் தமிழனுக்கு அப்போதாவது சுரணை உண்டாகிறதா பார்க்கலாமே!



உங்கள் மழலைச் செல்வம் அவனது
மென்மையான மிருதுவான உலகம்.
அவனுக்கு நீங்கள் கொடுக்கும் முதல்
திட உணவும் அவனைப் போலவே
மிருதுவாக இருக்கட்டும்.
உங்கள் குழந்தைக்கு இப்பொழுது 4 மாதங்களாகிறது. இச்சமயம் அவனுக்கு தாய்ப்பால் மட்டுமல்லாமல் வேறு வகை உணவும் தேவை. ஏதாவது ஒரு திட உணவு. அதே சமயம் நீங்கள் அவனுக்கு தரும் திட உணவு மிருதுவானதாகவும் போஷாக்கு நிறைந்ததாகவும் இருந்திடல் அவசியம்.
ஆம், நெஸ்டம் தரும் போஷாக்கு போல - இது எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம். அரிசியிலிருந்து தயாரிக்கப்படும் நெஸ்டம், உங்கள் மழலைச் செல்வத்தின் மிகச் சரியான முதல் திட உணவாக அமைகிறது.
பாலுடன் நெஸ்டம் சேர்த்து உங்கள் குழந்தைக்கு ஸ்பூனால் ஊட்டுங்கள். இந்த ஆகாரத்தின் மூலம் அவன் வேகமாய் வளர்வதற்கு வேண்டிய எல்லா போஷாக்கு சத்துகளும் கிடைக்கின்றன.
உங்கள் செல்வ மகன் வளர வளர, நீங்கள் அவனுக்கு படிப்படியாய் புதிய ருசியுள்ள உணவு வகைகளை அறிமுகப்படுத்த வேண்டும். இவ்வகை ருசியை நீங்கள் எளிதில் மிருதுவாய் ஆரம்பிக்க நெஸ்டம் உங்களுக்கு உதவுகிறது. நெஸ்டம், பால் சேர்க்காத ஒரே குழந்தை ஆகாரமாய் இருப்பதால், இதை மிகச் சுலபமாய் மற்ற உணவு வகைகளுடன் கலந்திட முடியும். உதாரணமாய், குழைய வைத்த வாழைப்பழம் காய்கறிகள் மற்றும் தயிருடன் உங்கள் குழந்தைக்கு நெஸ்டம் கொடுங்கள். நெஸ்டம் தரும் எல்லா வித மிருதுவான தனிச் சிறப்பான போஷாக்குகளுடன் அவன் வளருவதைப் பாருங்கள்.
Nestlé
NESTUM
Baby Cereal
Weaning Food
Rice
mix with milk
Refill Pack
லேபிளில் குறிப்பிடப்பட்டுள்ள விதி முறைகளை கவனமாய் பின்பற்றுங்கள்.
இலவசம்
நெஸ்டம் செய்முறை
புத்தகத்திற்கு எழுதுங்கள். போஸ்ட் பேக் 25,
புதுடில்லி-110016
NESTLÉ
நெஸ்டம்
எளிதில் ஜீரணிக்க உகந்த குழந்தை ஆகாரம்.
முக்கிய அறிவிப்பு : உங்கள் குழந்தைக்கு தாய்ப்பால்தான் மிகவும் சிறந்தது. உங்கள் குழந்தைக்கு 4 மாதங்கள் ஆனதில் இருந்து தாய்ப்பாலுடன் குழந்தைத் தானிய உணவும் கொடுங்கள்




# வரவு: நாற்பத்தாறு அமைச்சர்கள்; செலவு: நாற்பத்தெட்டுக் கோடி ரூபாய்!

**க**ர்நாடகத்தில், பஞ்சாயத்துராஜ் தேர்தல்கள் தள்ளி வைக்கப்பட்டதை எதிர்த்து, அமைச்சர் கோர்படே ராஜி நாமா செய்தது மட்டும்தான் முதல்வர் மொய்லிக்குத் தலைவலி என்பதில்லை; அண்மையில் நடந்த கர்நாடக அமைச்ச ரவை விஸ்தரிப்பு கூட மொய்லிக்குத் தலைவலியைத்தான் ஏற்படுத்தியுள்ளது. புதிய அமைச்சர்கள் பதவியேற்பு விழா வில் கூட கடனே என்றுதான் கலந்து கொண்டார்.

●● மொத்தம் நாற்பத்தாறு மந்திரி கள். மொய்லிக்கு வேண்டியவர்களை விடவும் 'வேண்டாத வர்கள்'தாம் அதிகம். இவர்களுக்கு இலா காக்கள் ஒதுக்குவதை விடவும் இடம் ஒதுக்குவதில்தான் பிரச்னை. விதான சௌதாவில் இடமே இல்லாத அளவுக்கு அலுவலகங்கள். வீடுகள் ஒதுக்குவதிலும் பிரச்னை ஏற்பட்டு என்ன செய்வதென்று தெரியா மல் முடியைப் பிய்த்துக் கொள்கின்றனர் அதிகாரிகள்.

●● இந்த சந்தர்ப்பத்தைப் பயன் படுத்தி, சிலரைக் கழற்றி விட்டுவிட லாமா என்று பார்த்தார் மொய்லி. அந்த லிஸ்டில் இருந்தவர்களில் ஒருவர் மனோ ரமா மாதவராஜ். இந்த அம்மையார் விலக்கப்படுவார் என்பது தெரிந்ததும் டெல்லிக்குப் பறந்து, செல்வாக்கை உபயோகப்படுத்தி, எப்படியோ தமது பதவியைத் தக்க வைத்துக் கொண்டார். ஆயினும் அவரிடமிருந்த இலாகாவைப் பறித்துக் கொண்டு 'விபசார தடுப்பு மந்திரி' - என்று இல்லாத ஒரு இலா காவை ஒதுக்கி கோபத்தைத் தணித்துக் கொண்டார் மொய்லி.

●● உள்ளூர்ப் பத்திரிகைகள் சகட்டு மேனிக்கு மொய்லியை விளாசுகின்றன. ''ஏற்கெனவே கஜானா காலி; திட்டங் களை நிறைவேற்றவே பணமில்லை. பியர்லெஸ் நிறுவனத்திடமிருந்து இரு நூறு கோடி ரூபாயை வட்டிக்குக் கடன் வாங்கி நடத்துகின்ற நிலை; இந்த லட்ச ணத்தில் நாற்பத்தாறு மந்திரிகளுக்கான ஒரு வருடச் செலவு மட்டும் நாற்பத் தெட்டுக் கோடி ரூபாய்! அவசியம் தானா?''- என்று கேட்கின்றன பத்திரிகை கள். பதில் சொல்லத் தெரியாமல் விழிக் கிறார் மொய்லி.

●● பங்காரப்பா அமைச்சரவையில் இருந்தவர் ரமேஷ். காவேரி பிரச்னையில் ஏற்பட்ட பயங்கர கலாட்டாக்களுக்கும், குனிகல் இடைத் தேர்தலில் நடந்த துப் பாக்கிச் சூட்டிற்கும் குற்றம் சாட்டப்பட் டவர். இந்த மனிதரையும் மொய்லி அமைச்சராக்கியிருப்பதுதான் பலத்த சர்ச் சைக்கு உள்ளாகியிருக்கிறது. 'பிரதமரும் மற்ற மத்திய அமைச்சர்களும் பெங்களூர் வரும்போது தமிழ்நாட்டு ஸ்டைலில் வர வேற்பு போஸ்டர் அடித்தே அமைச்சர் பதவியை வாங்கிவிட்டார்' என்கிறார்கள். இவர் அமைச்சரானது பற்றி பங்காரப்பாவே ஆச்சரியப்படுகிறார். ''ரமேஷை பதவியி லிருந்து விலக்கி விடு' என்று பிரதமரே என் னிடம் முன்பு சொன்னார். இப்போது திரும் பவும் டில்லியிலிருந்தே பிரஷர் கொடுக்கப் பட்டு அமைச்சர் ஆகி இருக்கிறார். ஆச்சரி யம்தான்!'' என்கிறார் பங்காரப்பா.

**கே**ரள சட்ட சபையில் பஞ்சாயத்து ராஜ் மசோதா பற்றிய சூடான விவாதம். தமது முத்து மாலையை ஒரு கையால் எடுத் துப் பல்லால் கடித்துக் கொண்டே விவாதத் தைக் கேட்டுக் கொண்டிருந்தார், பெண் எம். எல்.ஏ. அல்போன்சா ஜான். விவாதத்தின் சூடு தாளாமல் கொஞ்சம் அழுத்தமாகக் கடித்துவிட்டாரோ என்னவோ, மாலை அறுந்து முத்துகள் மேஜையடியில் சிதறிப் போய் விட்டன. அவற்றைப் பொறுக்கி யெடுக்க ஆரம்பித்தார் அல்போன்சா. விவரம் அறிந்த சபாநாயகர், ''எடுக்கவோ, கோக்கவோ!'' என்று கேட்க, அவையில் ஒரே சிரிப்புத்தான்!

●● கடந்த ஏப்ரல் 27-ம் தேதியிலிருந்தே கேரள மக்கள் ஏக பெருமையில் இருக்கி றார்கள். காரணம் 'இந்தியன் கம்யூனிகேட் டர்' என்னும் ஆங்கில தினசரி. ஆம்; இந்தி யாவிலேயே படித்தவர்கள் அதிகமுள்ள மாநிலமாக இருப்பினும் முழுக்க முழுக்கக் கேரளாவிலிருந்தே ஆங்கில தினசரி ஒன்று வருவது இப்போதுதான்!

பெங்களூரிலிருந்து: **பெர்னாண்டஸ்**
திருவனந்தபுரத்திலிருந்து:
**எஸ்.எஸ்.மணி**

# அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி-1994

முதல் பரிசு ரூ.1,500

இரண்டாவது பரிசு ரூ.1,000

மூன்றாவது பரிசு (இரு கதைகளுக்குத் தலா ரூ.500 வீதம்) ரூ.1,000

ஆக மொத்தம் ரூ.3,500 பரிசுகளாக வழங்கப் பெறும்.

தவிர, பிரசுரத்துக்கு ஏற்கப்படும் ஒவ்வொரு கதையும் ரூ. 125 சன்மானம் பெறும். அறிமுக எழுத்தாளர்களுக்குப் போனஸ் உண்டு.



- கதைகள் சொந்தக் கற்பனை என்றும், இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் பிரசுரமானதில்லை என்றும் உறுதிமொழி தேவை.
- அறிமுக எழுத்தாளர் எனில் இதற்கு முன் எந்தப் பத்திரிகையிலும் எழுதியதில்லை என்றும் போட்டி முடிவு அறிவிக்கப்படும் வரை எழுத மாட்டேன் என்றும் உறுதிமொழி தர வேண்டும்.
- நடுவர் குழு கதைகளைப் பரிசீலித்துப் பரிசுக்குரிய கதைகளைத் தேர்ந்தெடுக்கும்.

கதைகளை அனுப்ப வேண்டிய கடைசி தேதி: ஜூன் 15.

- உறையின் மேல் 'அமரர் கல்கி நினைவுச் சிறுகதைப் போட்டி' என்று குறிப்பிடுதல் அவசியம்.
- பிரசுரத்துக்கு ஏற்கப்படாத கதைகளைத் திரும்பப் பெற,போதிய அளவு தபால்தலை ஒட்டிய சுயவிலாசமிட்ட உறையைக் கதையுடன் கூடவே அனுப்புதல் வேண்டும். பின்னால் தனியே அனுப்பிப் பயனில்லை.
- கதைகள் கல்கியில் நாலு பக்கங்களுக்கு மேற்படாதிருப்பது நலம். ஒருவர் எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
- எவ்விதக் கடிதப் போக்குவரத்தும் கிடையாது.
- சந்தேகம் எழும் விஷயங்களில் கல்கி ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.
- போட்டி முடிவும் முதல் பரிசுக் கதையும் ஆகஸ்டு 7 ஆண்டு மலரில் பிரசுரமாகும்.
- எழுத்தாளர்கள் பெருமளவில் உற்சாகத்துடன் கலந்து கொண்டு ஒத்துழைக்க வேண்டுகிறோம்.

- ஆசிரியர், கல்கி,47, ஜவஹர்லால் நேரு சாலை,
ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097.

**பொதுவாக, அரசாங்கத்தில் பிரச்னைகள் எப்படி உடனுக்குடன் தீர்க்கப்படுகின்றன என்பதைத் தெரிந்து கொள்ள விரும்பும் வாசகர்களுக்காக:-**

முதலமைச்சரின் தனிப்பிரிவு,
செயின்ட ஜார்ஜ் கோட்டை,
சென்னை - 9.

துறைத் தலைவர் அவர்களுக்கு,

முதலமைச்சரின் தனிப்பிரிவிற்கு அனுப்பப்பட்ட புகார் மனு ஒன்றை இத்துடன் இணைத்துள்ளேன். கன்னியாகுமரி மாவட்டத்தில் உள்ள தங்களது கிளை அலுவலகம் ஒன்றில் நடந்ததாகக் கூறப்பட்டுள்ள ஒழுங்கீனங்கள் பற்றி ரகசிய விசாரணை மேற்கொண்டு, அதன் முடிவைத் தெரிவிக்குமாறு கேட்டுக் கொற்கிறேன்.

(ஒ-ம்) செயலருக்காக.

துறைத் தலைமை அலுவலகம்,
சென்னை.
15.7.82.

மாவட்ட அலுவலருக்கு,

தங்களது கட்டுப்பாட்டில் உள்ள பகுதியில் சில ஒழுங்கீனங்கள் நடைபெறுவதாக முதலமைச்சரின் தனிப்பிரிவிற்கு புகார் அனுப்பப்பட்டுள்ளது. அப்புகார் மனுவின் நகல் ஒன்று இத்துடன் இணைக்கப்பட்டுள்ளது. இதன் மீது ரகசிய விசாரணை நடத்தி அறிக்கை அனுப்பவும். இது மிகவும் அவசரம்.

(ஒ-ம்) துறைத் தலைவர்.

2.5.83

துறைத் தலைவர் அவர்களுக்கு,

தாங்கள் அனுப்பிய புகார் மனு இம்மாவத்தின் வட பகுதியைச் சேர்ந்ததாகும்.




எனவே, புகார் மனுவை சம்பந்தப்பட்ட வட பகுதி அலுவலருக்கு அனுப்பியுள்ளேன். இது பற்றிய அறிக்கையை அவரிடமிருந்து பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தென்பகுதி மாவட்ட அலுவர்,
கன்னியாகுமரி.

6.8.84

வடபகுதி மாவட்ட அலுவலருக்கு,

தென்பகுதி மாவட்ட அலுவலரிடமிருந்து பெறப்பட்ட புகார் மனுவின் மீது என்ன நடவடிக்கை எடுக்கப்பட்டது என உடனே தெரிவிக்கவும். இது மிக மிக அவசரம்.

(ஒ-ம்) துறைத் தலைவருக்காக.

# அவசரம் மிக அவசரம்

# சத்யா

3.1.85

துறைத் தலைவர் அவர்களுக்கு,

தென்பகுதி மாவட்ட அலுவலரிடமிருந்து கடிதம் மட்டுமே பெறப்பட்டுள்ளது. அதன் இணைப்பு பெறப்படாததால், புகார் விவரம் தெரியவில்லை. எனவே, புகார் மனுவின் நகலை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன்.

வடபகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

16.9.85

வடபகுதி அலுவலருக்கு,

புகார் மனு ஏற்கெனவே தென்பகுதி மாவட்ட அலுவலருக்கு அனுப்பப்பட்டு விட்டது. அதன் நகல் இவ்வலுவலகத்தில்



இல்லை. எனவே, அதனை தென்பகுதி மாவட்ட அலுவலரிடமிருந்து பெற்றுக் கொள்ளவும்.

(ஒ-ம்) துறைத் தலைவருக்காக.

7.2.86

தென்பகுதி மாவட்ட அலுவலருக்கு,

புகார் மனுவின் நகலை உடனே அனுப்பவும். இது மிகவும் அவசரம்.

வட பகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

5.4.88

தென்பகுதி மாவட்ட அலுவலருக்கு,

பல நினைவூட்டுகள் அனுப்பியும், புகார் மனுவின் நகல் தங்களிடமிருந்து கிடைக்கப்பெறாததால் மேல் நடவடிக்கை எடுக்க இயலவில்லை. உடனே தனிக்கவனம் செலுத்தி புகார் மனுவின் நகலை அனுப்பவும்.

வடபகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

7.2.89

வடபகுதி மாவட்ட அலுவலருக்கு,

புகார் மனுவின் நகலை இத்துடன் இணைத்துள்ளேன். புகாரின் மீது விசாரணை நடத்தி அறிக்கையை துறைத் தலைவருக்கு அனுப்பி வைக்குமாறு கேட்டுக் கொள்கிறேன்.

தென்பகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

11.3.90

துறைத் தலைவர் அவர்களுக்கு,

புகார் மனுவில் குறிப்பிட்டுள்ள அலுவலகம், மாவட்டம் மூன்றாகப் பிரிக்கப்பட்டபோது மீண்டும் தென் பகுதியுடன் இணைக்கப்பட்டுவிட்டது. எனவே, இது பற்றிய அறிக்கையைத் தென்பகுதி மாவட்ட அலுவலரிடமிருந்து பெற்றுக் கொள்ள வேண்டுகிறேன்.

வடபகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

நகல்: தென்பகுதி மாவட்ட
அலுவலருக்கு.

8.12.90

துறைத் தலைவர் அவர்களுக்கு,

புகார் மனுவில் குறிப்பிட்டுள்ள ஒழுங்கீனங்கள் நடந்த இடம் இம்மாவட்டத்தைச் சேர்ந்த போதிலும், புகாரில் குறிப்பிட்டுள்ள சம்பவம் நடந்தபோது வட மாவட்டத்தின் பொறுப்பில் இருந்ததால் அவர் தான் இதன்மீது விசாரணையை நடத்த வேண்டும். எனவே அவரிடம் அறிக்கையைப் பெற்றுக் கொள்ளுமாறு கேட்டுக்



கொள்கிறேன்.

தென்பகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

7.7.91

வட பகுதி மற்றும் தென்பகுதி மாவட்ட அலுவலர்களுக்கு,

புகார் மனுவின் மீது தாங்கள் இருவரும் ஒருங்கிணைந்து விசாரணை நடத்தி கூட்டறிக்கை அனுப்புமாறு கேட்டுக் கொள்கிறேன். இது மிகவும் அவசரம்.

(ஒ-ம்) துறைத் தலைவருக்காக.

4.3.92.

துறைத் தலைவர் அவர்களுக்கு,

வட பகுதி மாவட்ட அலுவலர் ஓய்வு பெற்றுச் சென்று விட்ட படியால், கூட்டாக விசாரணை நடத்த இயலவில்லை. எனவே, வட பகுதிக்குப் புதிய அலுவலரை உடனே நியமிக்கக் கேட்டுக் கொள்கிறேன்.

தென் பகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

1.11.92

தென்பகுதி மாவட்ட அலுவலருக்கு,

வடபகுதிக்குப் புதிய அலுவலரை நியமிக்க அரசுக்கு எழுதப்பட்டுள்ளது. அரசாணை எதிர்பார்க்கப்படுகிறது.

(ஒ-ம்) துறைத் தலைவருக்காக.

3.1.93

துறைத் தலைவர் அவர்களுக்கு,

நான் வட பகுதியின் புதிய அலுவலராகப் பொறுப்பேற்றுக் கொண்டுவிட்டேன். ஆனால், தென்பகுதி அலுவலர் தற்போது விடுப்பில் சென்றுள்ளார். அவர் மீண்டும் பணியில் சேர்ந்தவுடன் கூட்டு விசாரணை நடத்தி அறிக்கை அனுப்புகிறோம்.

வடபகுதி மாவட்ட அலுவலர்,
கன்னியாகுமரி.

11.8.93

வடபகுதி மாவட்ட அலுவலருக்கு,

தென்பகுதி மாவட்ட அலுவலர் விடுப்பு முடிந்து பணியில் சேர்ந்து விட்டதாகத் தெரிகிறது. எனவே, புகார் மனுவின் மீது ரகசிய விசாரணை நடத்தி தங்களது கூட்டறிக்கையை அனுப்பவும்.

(ஒ-ம்) துறைத் தலைவருக்காக.

10.4.94.

துறைத் தலைவர் அவர்களுக்கு,

புகார் மனுவின் மீது உடனடியாக விசாரணை மேற்கொள்ளப்பட்டது. புகாரை எழுதியவர்கள் யாரும் இப்போது உயிரோடு இருப்பதாகத் தெரியவில்லை. எனவே, புகார் மனுவின் மீதான விசாரணையைக் கைவிடலாம் எனத் தெரிவித்துக் கொள்கிறோம்.

வடபகுதி மற்றும் தென்பகுதி
மாவட்ட அலுவலர்கள்,
கன்னியாகுமரி.



# வண்டிச்சோலை சின்ராசு

('ண' என்ன பாவம் பண்ணிற்று?)

ஆரம்பம் என்னவோ தடபுடல்தான். ஜாதிபதியால் கருணை மனு நிராகரிக்கப்பட்ட தூக்குக் கைதியாக, கண் சிவந்த சத்யராஜ"ம், கருணை மிகு ஜெயிலரும்.

'கண்டிப்பா வெளிய வருவேன்; அவனை ஒழிப்பேன்' என்று அதிரும் இசைப் பின்னணியில் சூளுரைக்கும் போது ஒரு சுவாரஸ்யமான ஃப்ளாஷ் பேக்குக்குத் தயாராகிறோம். நிகழ்வதும் அவ்வண்ணமே. ஆனால் போகப் போக, தடம் புரண்ட கூட்ஸாகிப் போவது, டைரக்டரின் கையாலாகாத்தனம்.

அதென்ன, எந்தப் படம் பார்த்தாலும், கல்யாணத்திற்கு முன்னால் கர்ப்பமாகி, கண்ணீர் விடுகிற ரோலாகவே தருகிறார்கள் சிவரஞ்சனிக்கு? அந்தச் சின்ன உருவத்துக் குச் சாக்கு மூட்டை சுற்றினாற் போல ஒரு புடைவை. அங்காள பரமேஸ்வரி மாதிரி ஒரு குங்குமம்.

அழுத கண்ணும் சிந்தின மூக்கும்... ஒரு படத்திலாவது அவரைக் காதல் பண்ண வைத்து, கடற்கரையோரம் லல்லல்லா பாட வைப்பவர்களுக்குப் பரிசு தர உத்தேசம்.

நாகரிக யுவதியாகக் கொஞ்ச நேரமும் தமிழ்ப் பண்பாடு மாறாத மங்கையாக மிஞ்சும் நேரமும் காலே அரைக்கால், அரையே முக்கால், முக்காலே அரைக்கால் ஆடைகளில் சமர்த்தாக வந்து போகும் சுகன்யாவுக்கு ஒரு கேள்வி: ஒரு சீனிலாவது 'நடிக்க' வாய்ப்புத் தரக் கூடாதா என்று டைரக்டரிடம் நீங்கள் ஏன் கேட்டிருக்கக் கூடாது?

சத்யராஜ் சிரமப் பட்டிருக்கிறார். தங்கை புருஷன் இறந்த செய்தியைச் சொல்லவும், சொல்லாமலிருக்கவும் முடியாமல் தவிக்கும் அந்த ஒரு காட்சி போதும்.

ஆனந்தராஜ் மறுபடி வில்லனாகி விட்டார். ரசிகர்கள் காப்பாற்றப்பட்டிருக்கிறார்கள். ஞானோதயம் நிரந்தரமாக இருக்கக் கடவது.

கிழக்குச் சீமையிலே வெற்றியைப் பார்த்து, தம்பி, ரஹ்மானை இசைக்க வைத்திருக்கிறார்கள். விசிலடித்து, வாயெல்லாம் வலிக்கிறது. இனிமையில் செவியெல்லாம் நிறைகிறது.

சத்யராஜின் உன்னதமான நடிப்பு முற்றிலும் வீணாக்கப் பட்டிருக்கிறது.

-ஆர்.பி.ஆர்.

# பெனிட்டோ குமார்

## 5

பிரகாஷுடைய தெளிவற்ற தன்மையைக் கண்டு கிருஷ்ணாராவ் சிரித்தார்.

''என்ன பிரகாஷ்?''

''எனக்கு அந்த வகையில் ஒரு கம்பெனியை நிர்வகிக்கும் எண்ணம் இல்லை சார்...''

''உன்னால அந்தக் கம்பெனியைக் கட்டிக் காக்க முடியும் என்கிற நம்பிக்கை உனக்கு இருக்கா, இல்லையா?''

''நம்பிக்கை, திறமை எல்லாம் இருக்கு. என்னவாவது செய்து, நானும் கொடிகட்டிப் பறக்கணும்கிற வேகம் இருக்கு. ஆனால் மெட்டல் கம்பெனி, ஸ்டெய்ன்லெஸ் ஸ்டீல், வெல்டட் பைப்ஸ், சீம்லெஸ் பைப்ஸ் எல்லாம் எனக்கு அப்பாற்பட்ட சப்ஜெக்ட்.''

''எப்படி...?'' சோபா கிரீச்சிட நெளிந்தார் கிருஷ்ணாராவ்.

''நான்... போஸ்ட் கிராஜுவேட் இன் கெமிஸ்ட்ரி. படிக்கும்போதே, 'மெடிகல் ரெப்' வேலை பார்க்கணும். என்னோட திறமையை அதில் காட்டணும்னு தீர்மானிச்சேன். இப்பவும் அதே எண்ணத்தோடதான் இருக்கேன்.''

கிருஷ்ணாராவ் ஒரு பெருமூச்சோடு தொடர்ந்தார் :

''நான் நம்பியார் போலவோ, அம்ரிஷ் பூரி போலவோ என் மகளுடைய காதலைக் கொல்லும் வில்லன் இல்லை. என்னோட மகள் எனக்கு வேண்டும். அவளின் மனம் வேண்டும். உன்னை விட்டால் எனக்கு மாப்பிள்ளை கிடைக்க மாட்டான்னு நினைக்காதே! 'சொடக்' போட்டால் சென்னை, கோவையிலிருந்தெல்லாம் வந்து நிஷாவைக் கொத்திக்கிட்டுப் போக ஆளிருக்காங்க. எல்லாரும் எம். பி. ஏ. கம்பெனி நடத்தறதுலே எக்ஸ்பர்ட். ஆனா, என் மகள் உன்னை விரும்பறாள். நீ அவளை விரும்பறே. இந்தக் கூட்டைக் கலைக்க வேண்டாம் என்கிற எண்ணம்தான்...''

ரொம்ப வாத்சல்ய வாக்கியங்களை உபயோகப்படுத்தினார். நிஷா கொஞ்சமாய் நிதானம் இழந்தாள். பிரகாஷின் நிலை தர்மசங்கடமானது.

''கேட்டுக்க பிரகாஷ்! நான் உன்னைப் போல இருந்தப்போ... தமிழ்நாடு, கேரளா கடற்கரையில் ஏகமா தோரியம் இருக்குது. இதை எக்ஸாமின் பண்ணி கவர்ன்மெண்ட்டை உசுப்பிவிட்டுப் பணம் பண்ணலாம்னு ஆசைப்பட்டேன். என்னோட மோனிஷா... நிஷாவோட அம்மா, என் வாழ்க்கையையே மாத்திட்டா. மாற்றி அமைச்சுட்டு மேல் லோகத்துக்கும் போயிட்டாள்...''

''அதான் தெரியுமேப்பா...''

''பிரகாஷுக்குச் சொல்றேன். மனித வாழ்வே ஒரு மாயம். நாம நினைக்கிறது நடக்காது. ஒரு நூலோட இரண்டு முனைகள். ஒரு முனையில் நாம். இன்னொரு முனையில் பரம்பொருள்...''

''சார்... நான் யோசிக்கிறேன்'' என்றான் பிரகாஷ், இதற்குமேல் தாங்காது என்று தீர்மானித்தவனாக.

இரவு எட்டு மணிக்கு நிஷா அவனை வழியனுப்ப பாந்த்ரா ஸ்டேஷன் வரைக்கும் வந்தாள்.

''நிஷா... ஷில்பா கம்பெனியில் இன்னிக்கு ஒரு சம்பவம்...''

''என்னது...?''

''இண்டர்வியூ பண்ணினாரே பாலேகர்...''

''ஆமா....!''

''அந்த ஆள் இன்னொரு அறையில் போய் ஒரு ஃபைலை எடுத்துட்டு வரச் சொன்னார்...'' என்று தொடங்கி நடந்ததைக் கூறி, தான் படித்ததையும் சொன்னான்.

''எனக்கு விளங்கலை'' என்றாள் நிஷா.

''எனக்கும் மொத்தமா விளங்கலை. என்னமோ... ஹைட்ரோகுளோரைட், ஏதோ அடல்டரன்ட் இதுகளை ஃபார்முலாவில் மிக்ஸ் பண்ணினால் அது ட்ரக் யூசருக்கு எக்ஸ்ட்ரா கிக் கொடுக்குதாம்...''

''அப்போ... உங்க கம்பெனிக்காரங்க அவங்களோட தயாரிப்புல என்னவோ மிக்ஸ் பண்றாங்க?''

''ஆமாம், 'தேக்கரோ' என்கிற எங்களோட ப்ராடெக்ட், வாயுத் தொல்லை உள்ளவங்க கரைச்சுக் குடிக்க வேண்டியது. அவுங்களுக்கு எக்ஸ்ட்ரா கிக் என்ன வேண்டிக் கிடக்குது...?''

''வேற என்னவோ சொன்னியே... 'ஜீவோதய ஷில்பா'ன்னு!''

''ஐ டிராப்ஸ். அதுவும் கண்ணுல போடறது. என்னத்துக்கு எக்ஸ்ட்ரா கிக்?''

''மேபி பிரகாஷ். வார்த்தைகளோட அர்த்தம் புரியாம ஏதாச்சும் எழுதியிருக்கலாம்!''

''விச் கிவ்ஸ் எக்ஸ்ட்ரா-கிக் டு ட்ரக் யூசர்'னு இருந்ததே... 'ட்ரக் யூசர்'னு



# நரகமான நகரம்

சொன்னால்... 'போதை வஸ்து பயன் படுத்தற ஆளுங்க'ன்னு அப்பட்டமாச் சொல்லுதே...?''

''உன் சந்தேகம் கரெக்ட் பிரகாஷ்... நாளைக்கு அந்த ஃபைலை இன்னொரு தடவை பார். அல்லது அந்த பாலேகர் கிட்டே கேட்டுரு...''

''ஏற்கெனவே ஒரு டவுட். இது ரெண்டாவது.''

''முதலாவது என்ன...?''

''அந்த ஷ்யாம்கந்தர். இவங்கல்லாரும் தப்பானவங்கன்னு வி.டி. ஸ்டேஷன்ல வச்சு சொன்னேனே!''

''விட்டுரு பிரகாஷ்! வீண் வம்பில மாட்டாதே; உன் காரியத்தை மட்டும் பார்!''

பிரகாஷ் கிளம்பும் வேளையில் அவளுடைய கன்னத்தில் தட்டினான். அவள் வெட்கமாக ஒதுக்கினாள். மீண்டும் அவளுடைய கன்னங்களை இரண்டு கைகளாலும் அடைய முயல, அவள் அதைத் தவிர்க்கப் பின்நோக்கி நகரப் போய் தடுமாற, கட்டிப் பிடித்துவிட்டான். அவள் அவனுடைய பிடியை அன்பாக, நிதானமாக விலக்கினாள்.

**ம**றுநாள் அலுவலகத்தில் அஜய், எல்லாரையும் அனுப்பிவிட்டுத் தனியாக பிரகாஷை மட்டும் ரொம்பவும் புகழ்ந்தான்.

''பிரகாஷ்... 'தேக்கரோ'வோட சாம்பிள் எடுத்து வச்சுக்க... ரெண்டு டப்பா வச்சுக்க போதும். காட்கோபர்ல ஷிலா மெடிக்கல் சென்ட்டர்னு இருக்குது. சாம்பிள் காட்டச் சொல்லுவாங்க. அதை லாப்ல கொடுத்து ரிப்போர்ட் வாங்கிப் பார்த்துட்டு அப்புறம்தான் எடுத்துக்குவாங்க. ரொம்பப் பெரிய இடம். இவங்க கன்வின்ஸ் ஆனா, அப்புறம் மார்க்கெட்ல யார்கிட்டயும் நம் ப்ராடக்டைத் தள்ளறது சுலபம்.''

''விளங்குது...''

''உங்கிட்ட இதைத்தான் எதிர்பார்க்கிறோம். அவங்க நம்ப ப்ராடக்டை டெஸ்ட் பண்ணி ஏற்றுக்கிடணும்.''

''சரி சார்... இதை ஒரு சவாலா எடுத்துக்கறேன்...''

**ப**திலோரு மணிக்கு அலுவலகம் விட்டு வெளியே வந்தான். மின்சார ரயிலில் காட்கோபர் வந்தான். டாக்ஸி ஒன்றை அமர்த்தினான்.

'இப்பொழுது ஓர் உண்மை புலனாகி விடும். இந்த ஷகிலாகாரர்கள் லாபில் டெஸ்ட் பண்ணக் கொடுக்கும் போது, அதில் எதுவும் கலப்படம் இருந்தால் கண்டு பிடித்து விடுவார்கள். அப்படித் தவறாக எதுவும் கலந்திருந்தால் லாப் டெஸ்ட்டுக்கு என அஜய் நம்மிடம் தைரியமாகத் தரமாட்டானே! ஒருவேளை நம்மிடம் தந்த இந்த இரண்டு சாம்பிளில் மட்டும் ஏதும் கலக்கா



''கேடி ரங்கனைப் பகைச்சுக்கிட்டது தப்பாப் போச்சு!''

''ஏன்?''

''நான் மாமூலே வாங்க மாட்டேன்னு ஊர்ல ஒரு வதந்தியைக் கிளப்பி விட்டுக்கிட்டு அலையறான்!''

- அம்பை தேவா

மல் இருக்கலாமோ? அது எப்படி...? நான்தானே ஸ்டாக்கிலிருந்து இங்கிருந்து ஒன்று அங்கிருந்து ஒன்று என்று எடுத்தேன்?

ஷகிலாவில் அரை மணி நேரம் காத்திருந்தபின் மஞ்சளான நபர் வந்து ''வாட் டு யு வான்ட்?'' என்று விசாரித்தான். மெழுகு போன்ற முகம். இயந்திர இயக்கம்.

''சேட்டைப் பார்க்கணும்.''

''அவர் ஜெர்மனி போயிருக்கார். நான்தான் இப்போதைக்கு சேட்... என்ன விஷயம்?''

''சேம்பிள் கொண்டு வந்திருக்கேன்.''

''கொடுத்துட்டுப் போங்க!''

''மறுபடியும் எப்போ வரணும்?''

''நாங்க சொல்லி அனுப்பறோம்.''

**மா**லை மூன்று மணி அளவில் மீண்டும் அலுவலகம் வந்தான். ரிசப்ஷன் ரீட்டா விட்டலாச்சார்யா பட டான்ஸர் போல குறைவான ஆடைகளில் கவர்ச்சியாக ரிசீவரைக் காதில் வைத்திருந்தாள்.

சேல்ஸ் கேபினில் அவனுடைய சகாக்கள் ஏற்கெனவே வந்து டைகளை உருவியிருந்தார்கள். பாலேகர் காபினுக்கு வருகிறார் என்றவுடன் அவசரமாக டைகளை மீண்டும் கட்டிக் கொண்டார்கள். பாலேகர் புதிய சமாசாரங்கள் நிறைய எடுத்துக் கூற, அன்றைய அலுவல்கள் அதோடு முடிந்தது.

**அ**டுத்த நாள் காலையில் அலுவலகம் செல்லத் தயாராகியிருந்த நேரம் நிஷா வீட்டுக்கு வந்திருந்தாள். பிரகாஷின் அப்பா ஏற்கெனவே கிளம்பிப் போயிருந்தார்.

''நிஷா... காலையிலேயே வந்துட்டியா?'' - அம்மா.

''ஏன், வரக் கூடாதா ஆன்ட்டி...?''

''நான் வரவேண்டாம் என்றால் வராமல் இருந்து விடுவாயா?''

''வா... என் இதயராணி!'' - கைகளை விரித்தான் பிரகாஷ்.

'வந்தேன் என் இதயராஜா!'' என்று சோபாவுக்குப் பின் பத்திரமானாள்.

''வந்த நோக்கம்?''

''கார் கொண்டு வந்திருக்கேன். உங்களை ஆபீஸ்ல டிராப் பண்ணிட்டு லாபிங்டன் ரோடு போய்ட்டு வீட்டுக்குத் திரும்பிடறேன். ஒரு புத்தகம் வாங்கணும்.''

பிரகாஷ் கம்பெனி அளித்திருந்த அந்த சூட்கேஸை காரின் பின் சீட்டில் போட்டு விட்டு டிரைவர் சீட்டில் அமர்ந்து கொண்டான். அருகில் நிஷா. அம்மா அவசரமாக ஓடிவந்து, ''டிபன் சாப்பிடலை?'' என்றாள்.

''ஃப்ரிஜ்ல வைக்கடு. சாயந்திரம் திரும்பி வந்து வெட்டறேன்.''

டயர்கள் கிறீச்சிட கார் பாய்ந்தது.

தாதர் கடந்து, கல்பாதேவி நோக்கி வேகப்பட்ட சமயம், இடதுகையால் அவளுடைய தொடையில் தட்டினான்.

''என்ன?'' என்றாள்.

''நெருங்கி உட்காரேன்.''

''பிரகாஷ்! நீ வரவர தெளிஞ்சுட்டே...''

''பெண்களே இப்படித்தான்... தொந்தரவு பண்ணலைன்னா, 'இவன் மடையன்; ஒண்ணுந் தெரியாது' என்று முடிவு கட்டுவீங்க. கொஞ்சம் ஜாலியா இருந்தால்... 'பெண் பித்தன்' என்பீங்க!''

''ஐயோ...! இந்த டயலாக் எங்கே கிடைச்சுது?''

''நேற்று வீடியோல ஒரு தமிழ்ப் படம் பார்த்தேன்.''

''இரண்டு நிமிடங்கள் போனபின் கேட்டான்: ''என்ன புத்தகம் வாங்கணும்?''

''ராப்பிட் அட் ரெஸ்ட். அப்டைக்.''

''ஏதாவது லைட்டா படிக்கக் கூடாது? உனக்கு எதுக்கு அப்டைக்கும் அயான் ராண்டும்?''

பிரின்ஸஸ் ஸ்ட்ரீட் வளைவில் பிரகாஷ் இறங்கிக் கொள்ள, காரை நிஷா கையாண்டாள். போகும்போது உதட்டைக் குவித்து, 'ப்ச்' என்றாள். சிரித்தாள்.

அலுவலகத்தில் அஜய் எப்போதும் போல் மற்ற 'ரெப்'களை அனுப்பிவிட்டுக் கடைசியாக பிரகாஷிடம் வந்தான்.

''உன்னோட சூட்கேஸை ஆபீஸில் வச்சுடு. பாலேகர் ஸாஹிப் அந்தேரியில் ஹோட்டல் பானுவில் இருக்கார். அவர் உன்னை அங்கு வரச் சொன்னார். அதென்னவோ பாலேகருக்கு நாலு பேர்ல உன்னை மட்டும்தான் பிடிச்சிருக்கு. ஏகமா புகழறார்.''

புகழ்ச்சி பிரகாஷைக் குளிர வைத்தது.

''இப்ப நான் என்ன பண்ணணும்?''

''பாலேகர் ஸாஹிப், அந்தேரியில் நம்முடைய பெரிய கஸ்டமர்கள் இரண்டு மூணு பேரிடம் உன்னை அறிமுகப்படுத்தி வைக்கப் போகிறார். நம்முடைய ப்ரொடக்ஷன்ல பாதி அவங்கதான் விநியோகம் செய்யறாங்க.''

''என்னை அங்கே வரச் சொன்னாரா?''

''ஆமா... அவரோட சூட்கேஸ் இருக்குது. அதை எடுத்துக்கிட்டுக் கிளம்பு! ஹோட்டல் பானு எங்கேயிருக்கு தெரியுமா?''

''தெரியும். சாகர் ஏர்-போர்ட்டுக்கு எதிரே!''

''ரிசப்ஷன்ல உட்கார்ந்திரு. பாலேகர் ஸாஹிப் அங்கே வந்து உன்னை அழைச்சுட்டுப் போவார்.''

''ஓ. கே...''

''எலெக்ட்ரிக் ட்ரெயினில் போ! அந்தேரி ஸ்டேஷனில் இறங்கி ஈஸ்ட் சைடு போனால்... டாக்ஸிகள் நிற்கும்... ஒன்றை அமர்த்தினால் ஐந்து நிமிட பயணம்...''

''சரி, நான் புறப்படறேன்...''

பிரகாஷ் காப்பி வரவழைத்து சாப்பிட்டுவிட்டு, பாலேகரின் சூட்கேஸை எடுத்துக் கொண்டு கிளம்பினான். ரயில் ஏறி, அரை மணி நேரத்தில் அந்தேரி ஸ்டேஷன் வந்துவிட இறங்கிக் கொண்டான்.

ப்ரிட்ஜ் ஏறி கிழக்குப் பக்கம் வந்து டாக்ஸி தேடிய நேரம், அவன் நிற்கும் இடம் நோக்கி அந்தப் பேர்வழி புன்னகையோடு வந்தான். அன்று ஷ்யாம்சுந்தரோடு வந்தவன். வி.டி. ஸ்டேஷனில் அறிமுகமானவன்.

''என்னைத் தெரியும் என நினைக்கிறேன்.''

''எஸ்... கோகுல்... ஷ்யாம்சுந்தரோட தோஸ்த்...''

''வெரிகுட். உங்களை அந்தேரி ஸ்டேஷன் பக்கம் மீட் பண்ணச் சொல்லி ஷ்யாம் சுந்தர் சொன்னார்...''

''அவருக்கு எப்படித் தெரியும்?''

''அவருக்கு எல்லாம் தெரியும்.''

''நான் அர்ஜன்ட்டா போறேன். உங்க கூட நான் ஒத்துழைக்கிறதா இல்லை. என்னை விட்டுடுங்க.''

''விட்டுடறோம். கொஞ்ச தூரத்தில் ஷ்யாம்சுந்தர் வெய்ட் பண்ணிக்கிட்டிருக்கார். அவரை வந்து பார்த்துட்டுப் போயிடுங்க.''

''வேலை இருக்கு. ஹோட்டல் பானுவில் 'பாஸ்' வெய்ட் பண்றார்.''

''ஃபைவ் மினிட்ஸ்... ஒன்லி ஃபைவ் மினிட்ஸ்...'' என்ற கோகுல் பிரகாஷை வலுக்கட்டாயமாகத் தோளில் அழுத்தினான். அணைத்தபடியே செலுத்தினான்.



''உங்களுக்கு எப்பல்லாம் ஜோக் எழுதற மூடு வரும்?''

''ஹி... ஹி... யாரையாவது பழி வாங்கணும்னு நினைக்கும்போதெல்லாம் மூடு வரும்ங்க...!''

– உ. ர. சங்கர்

''ப்ளீஸ் டோன்ட் டச் மி...'' என்றான் பிரகாஷ்.

''ஏன்... இப்படி பயப்படறீங்க?''

''எனக்குப் பிடிக்கலை... கையை எடு! இனி என்னைத் தொட்டால் ஜெயில் அட்டாக்கு...'' கோபமானான் பிரகாஷ்.

அப்போது ஒரு துரதிர்ஷ்டவசமான சம்பவம் நடந்தது. ஒரு பிஸ்டலின் முனையிலிருந்து 'ட்ய்ங்' என்று ஒரு புல்லட் புறப்படும் ஒலி பிரகாஷுக்குத் தெளிவாகக் கேட்டது! திடுக்குற்று நிமிரத் தொடங்கு முன்னரே கோகுல் கனமயானதை உணர்ந்தான். கோகுல் கண்கள் செருக... கைகள் உதறச் சாய்ந்தான். அவன் மார்பில் குண்டு பாய்ந்த இடம் பளிச்சென்று சிவந்தது. நேர் எதிரே இருந்த ரெயில்வே ஓவர் பிரிட்ஜில் ஒருவன் அவசரமாகப் பிஸ்டலை மறைப்பதையும் பார்த்தான் பிரகாஷ்.

(தொடரும்)

# கனல்

சிறுத்த பெரிய மேகம் நிலவை மறைக்கவும் அடுத்த இருட்டிற்காகவே காத்திருந்தது போன்று, பிரஷ்ஷால் சுவரில் எழுதிக் கொண்டிருந்த பெரியவர் சோமு, பிரஷ்ஷை பெயிண்ட் டப்பாவில் போட்டுவிட்டு ஸ்டூலில் வந்து அமர்ந்து கொண்டார்.

''அண்ணே ரெண்டாவது ஆட்டம் சினிமா விட்டு ஒரு மணி நேரத்திற்கு மேல ஆயிடுச்சு. இந்தச் சுவரோட நிறுத்திக்கிட்டு நாளைக்குப் பாத்துக்குவோமா?''

பெரியவர் பதில் ஏதும் சொல்லாமல் சிந்தனையில் மூழ்கி இருந்தார்.

அந்த இருட்டிலும் அவர் சுவரில் எழுதத் துவங்கியிருந்த வாசகம் வீதி விளக்குகளின் வெளிச்சத்தில் தெளிவாகத் தெரிந்தது.

''சோதனைத் தீயில் புடம் போட்ட எங்கள் தளபதியே வருக!''

பெரியவர் தனக்குள் வேடிக்கையாகச் சிரித்துக் கொண்டார்.

'இவனுக்கு என்ன சோதனை வந்திருக்க முடியும்? சமீபத்தில்தான் இவன் கட்சிக்கு வந்தான். இப்ப எங்கேயோ போயிட்டான். கட்சிக்காக ஒரு கொடிக் கம்பமாவது நட்டிருப்பானா? இடையில வேற சில அரசியல் கட்சிகளுக்குப் போயி அங்கேயும் பதவிகளைப் பிடிக்க, சொத்து சேர்த்து இப்பத் திரும்பவும் புறப்பட்ட இடத்துக்கே வந்துட்டான். எதுவும் நடக்காத மாதிரி இங்கேயும் இவனுக்கு மாலை, மரியாதை! இதெல்லாம் எவ்வளவு அநாகரிகமா இருக்கு. இருக்கிற எல்லாத்தையும் புரட்டிப் போட்டுடுவோமுன்னு எவ்வளவு ஆவேசத்தோட புறப்பட்ட அரசியல் இயக்கம் இது! இப்ப அரசியலும் இல்லாம, ஆவேசமும் இல்லாம...தப்பு எங்க தொடங்கிச்சு...?'

''அண்ணே வெளிச்சம் வந்திடுச்சு. எழுதத் தொடங்கிடுவோமா? இதை முடிச்சதுக்கப்புறம் இன்னும் ஒரு சுவரு பாக்கியிருக்கு. மூணு 'ஆர்ச்', ரெண்டு 'கட்அவுட்' வேற வைக்கணும். இன்னும் மூணு நாளு தான் பாக்கியிருக்கு.''

அவசரப்படுத்திய குமாரை பதில் ஏதும் சொல்லாமல் திரும்பிப் பார்த்து, அடுத்த சிகரட்டை பற்ற வைத்துக் கொண்டார்.

'இன்னைக்கு என்ன ஆச்சு இவருக்கு? 'பிரஷ்ஷை' எடுத்தா முழுசும் எழுதி முடிச்சிட்டுத்தான் உட்காருவாரு. இந்தா அரை மணி நேரம் ஆயிடுச்சு. கேட்க கேட்கப் பதில் ஏதும் சொல்லாம எதையோ யோசிச்சுக்கிட்டு இருக்காரு. கட்சியில எவ்வளவு சீனியரு! இது இவருக்கு தலையெழுத்தா? காசை விட்டெறிஞ்சா எவ்வளவோ பேரு நீ, நான்னு போட்டி போட்டுக்கிட்டு ஓடி வருவான். இவ்வளவு வயசுக்கப்புறமும் பெயிண்டையும் பிரஷ்ஷையும் தூக்கிகிட்டு, நடு ராத்திரியில இப்படி தெருத் தெருவா அலைஞ்சுக்கிட்டு இருக்காரு. காசுக்கு ஆளைப்பிடிச்சா, 'ஆர்ச்', 'கட் அவுட்' சுவர் விளம்பரம், தட்டி போர்டு எல்லாம் பத்தாயிரத்துக்குள்ள எப்படி முடியும்? பக்கத்து வார்டுல இதுக்குப் பதினைந்தாயிரம் வாங்கிட்டானுக. இவரு இந்தப் பணத்திலேயே மிச்சப் படுத்தி பைசா சுத்தமா கணக்கு எழுதி, மீதியை வேற திருப்பிக் கொடுப்பாரு. அதனால கட்சியில மரியாதை மட்டும் தான் இவருக்கு. பதவி எல்லாம்....'

பெரியவர் ஒரு முடிவுக்கு வந்தவராய் பிரஷ்ஷை கையில் எடுத்துக் கொண்டு, நிறுத்தியிருந்த இடத்திலிருந்து எழுதத் துவங்கினார்.

பேனாவைக் கொண்டு பேப்பரில் எழுதும் லாகவத்துடன், சுவரில் அவர் எழுதும் வேகத்தையே பிரமிப்போடு பார்த்துக் கொண்டிருந்தான் குமார்.

'இவர் டெய்லரானதுக்குப் பதிலா பெயின்டரா இருந்திருந்தாக் கூட எவ்வளவோ சம்பாதிச்சிருக்கலாம்.'

பெரியவர் எழுதுவதற்கு வசதியாக பெயிண்ட் டப்பாவை அவர் அருகில் நகர்த்தி வைத்தான்.

சிரமம் சிறிதும் இன்றி நிமிடங்களில் வாசகங்களை எழுதி முடித்து,



தன் கட்சிக் கொடியின் நிறத்தால் அதற்கு 'பார்டரும்' வரைந்து முடித்தார்.

நின்று கொண்டிருந்த இடத்தில் இருந்து சற்று பின்னால் வந்து தாம் எழுதியிருந்ததைப் பார்த்தார்.

''அண்ணே நல்லா வந்திருக்குண்ணே..''

''இன்னும் ஒரு 'கோட்' கொடுத்தா நல்லா இருக்கும். என்னவோ எழுதப் பிடிக்கலை. இது போதும். புறப்படுவோம்.''

இதற்காகவே காத்திருந்தது போன்று குமார் சிதறிக்கிடந்த உபகரணங்களைச் சேர்த்து, அட்டைப் பெட்டியில் போட்டு மூடவும் பெரியவர் ஸ்டூலை தூக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தார்.

பெரியவரின் இந்தச் செய்கை குமாருக்கு வியப்பாகத் தெரியவில்லை. அவனுக்கு இது பழகிப் போன ஒன்று. ஏணி, ஸ்டூல், தட்டி என்று எப்போதும் தன் பங்கிற்கு எதையாவது இது போன்ற நேரங்களில் சுமக்கத்தான் செய்வார்.

எவ்வளவுதான் குமாரைப் போன்ற கட்சித் தொண்டர்கள் வற்புறுத்தினாலும் வேலை செய்யாமல் இருப்பது என்பது பிடிக்காததுடன், கூலிக்கு ஆள்தேடி இவைகளைச் செய்வதும் பெரியவருக்குப் பிடிக்காது.

''அண்ணே டவர் ஹோட்டல் திறந்திருக்கு. ஏதாவது சாப்பிட்டுட்டு வீட்டுக்குப் போவோமா?''

''எனக்கு வேண்டாம். நீ போய்ச் சாப்பிடு. நான் வீட்டுக்குப் போயி தூங்கப் போறேன்.''

குமாரின் பதிலுக்கும் காத்திராமல் ஸ்டூலை தூக்கிக் கொண்டு நடக்க ஆரம்பித்தார்.

இரவு அவ்வளவு நேரத்திற்குப் பிறகும் தன் வீட்டு வாசலில் இருந்த கூட்டம் அவருக்கு எரிச்சலைத் தந்தது.

'என்னதான் பண்ணுவானுகளோ இந்த ராத்திரியில. என்னதான் படிக்கிறானுகளோ. நாளைக்கு ஏதாவது சினிமா ரிலீசாகும். பேனர் கட்றதைப் பத்திப் பேசிட்டு இருப்பானுக...'

''சமதர்மா உங்க அப்பா வர்றாரு. ஏதாவது சொல்வாரு. பேசிக்கிட்டபடி நாளைக்குச் சந்திப்போம்.''

பெரியவர் வீட்டை நெருங்குவதற்கு முன்பே அவர்கள் கலைந்து போனார்கள்.

மிகவும் சோர்வாக உணர்ந்ததால் பையனை அழைத்து ஏதும் பேசத் தோன்றாமல் வராந்தாவில் மனைவி தாயாராக எடுத்த வைத்திருந்த பாய், தலையணையை எடுத்துப் போட்டுக் கொண்டு படுத்தார்.

அவருடைய பெரும்பாலான இரவுகள் இப்படித்தான். கட்சி வேலை பொதுக்கூட்டம் என்று அலைந்துவிட்டு கைகால்களைக் கழுவக்கூட தோன்றாமல் அப்படியே படுத்துவிடுவார். படுத்தவுடன் தூக்கமும் வந்துவிடும். இன்று படுத்து நீண்ட நேரம் ஆகியும் தூக்கம் வராமல் புரண்டு படுத்துக் கொண்டிருந்தார்.

சிறிது நாட்களாகவே அமைதியற்று

சுப.புன்னைவனராசன்

இருந்த அவர் மனதை, எழுதிவிட்டு வந்த விளம்பரம் இன்னும் கலைத்துப் போட்டது.

'சொந்த வாழ்க்கை, பொதுவாழ்க்கை எதிலுமே நேர்மை இல்லாத ஒருத்தனைப் போய் 'தளபதியே வருக'ன்னு வரவேற்பது எவ்வளவு பெரிய சறுக்கல்! இவனை எல்லாம் தலைமை எப்படி சகித்துக் கொள்கிறது! தலைவர்களும்தான் என்ன வாழ்கிறார்கள்? ராஜவம்சத்தில் பிறந்தவர்கள் போல், முடி சூட்டல்களும், செங்கோல்களும்,வீரவாள்களும், ஏன் கட்சி இப்படி ஆகிப்போனது! கல்லூரி படிக்கும் பையன் அவனுடைய அபிமான நடிகரின் திரைப் படம் திரையிடப்படுவதற்கு போஸ்டர் அடித்து ஒட்டுவதும், தோரணம் கட்டுவதும் இந்த அவலத்தின் தொடர்ச்சிதானே! இதற்கெல்லாம் நான் நம்பிக்கை வைத்திருக்கும் அரசியல் இயக்கமும் காரணமாகிப் போனதே...'

புரண்டு படுத்து, கண்களை இறுக மூடிக் கொண்டு சிந்தனை ஏதுமின்றித் தூங்க முயற்சி செய்து நீண்ட போராட்டத்திற்குப் பிறகு ஒரு வழியாய் தூங்கிப் போனார்.

விடிந்து வெகு நேரமாகியும் தூங்கிக் கொண்டிருந்தார்.

''ஐயோ என் மவனே...என்ன காரியமடா பண்ணிப்புட்டே. இதுக்காகவா ராஜா உன்னைப் பெத்து வளர்த்தேன்.''

அந்தத் தெரு முழுவதுக்கும் கேட்பது போன்று மனைவி வைத்த ஒப்பாரி அவரைத் திடுக்கிட்டு விழித்தெழச் செய்தது.

''என்ன ஆச்சு சமதர்மனுக்கு....''

அலறி அடித்துக் கொண்டு மனைவியிடம் ஓடினார்.

மனைவியைச் சுற்றி ஒரு பெருங் கூட்டமே கூடி நின்றது. பெரியவரின் கேள்விக்குப் பதில் ஏதும் கூறாமல், அழுது கொண்டே இருக்கும் மனைவியைப் பார்த்து எரிச்சலோடு,

''சொல்லிட்டு ஒப்பாரி வையேன். சமதர்மன் எங்கே...?''

அப்போதும் மனைவியிடம் இருந்து பதில் ஏதும் இல்லை.

அதற்குப் பதிலாக எதிர்வீட்டுச் சிறுமி தான் பேசினாள்.

''தாத்தா அண்ணனை போலீஸ் புடிச்சிட்டாங்க. சாகும்வரை உண்ணா விரதமிருக்கப் போச்சாம்.''

''எதுக்காக சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போனான்? இப்போ எந்தப் பிரச்னையும் இல்லையே? ஒரு வேளை காதல் விவகாரம் ஏதாவது...?''

மீண்டும் அந்தச் சிறுமிதான் பேசினாள்.

''தாத்தா எங்க ஹீரோ நடிச்ச புதுப் படத்தோட பாட்டு நேத்து 'ஒலியும் ஒளியும்ல' போடறதாச் சொல்லிட்டுப் போடல. அதான் அண்ணனும் அவரோட பிரண்டும் டீ.வி.ஸ்டேஷன் முன்னால சாகும்வரை உண்ணாவிரதமிருக்கப் போயிட்டாங்க.''

''பையன் சாகும்வரை உண்ணா விரதமிருக்கப் போயிருக்கான். போலீஸ்ல புடிச்சிக்கிட்டு போயிருக்காங்க. கொஞ்சமாவது பதட்டம் இருக்கா பாருங்க இவருகிட்ட. இந்தப் பையன் இப்படி ஆனதே இவரால




- கார்த்திக் ராஜா

தான்...''

மனைவியின் அர்ச்சனைக்குப் பயந்து பெரியவர் மெதுவாக அந்த இடத்தை விட்டு நகர்ந்தார்.

போலீஸ் ஸ்டேசனுக்குச் சென்று, பையனை அழைத்து வர முடியுமா என்று பார்ப்போம் என்ற நினைப்போடு அவர் வீட்டை விட்டு வெளியே வந்தபோது, அவரது வீட்டை நோக்கி வேகமாகச் சைக்கிலில் வந்த குமார்-

''அண்ணே சமதர்மன் 'ஓவர்நைட்ல' பாப்புலர் ஆயிட்டான். அவுங்க ஹீரோ போன் போட்டு விசாரிச்சிருக்காப்ல. போலீஸ் ஸ்டேசன் வாசல்ல ஒரே கூட்டம். சமதர்மனை வெளியே விடுங்கன்னு கோஷம் போட்டுட்டு இருக்காங்க. எல்லாம் விடலைப் பையனுக....'' மூச்சு விடாமல் குமார் பேசிக் கொண்டிருந்தான்.

''போ வீட்ல போயி அவகிட்ட விஷயத்தைச் சொல்லு. பையன் போய்ச் சேர்ந்துட்ட மாதிரி பெருசா ஒப்பாரி வச்சுக்கிட்டு இருக்கா...''

குமார் சைக்கிளை நிறுத்திவிட்டு வீட்டிற்குள் சென்றான்.

**வீ**ட்டிற்குள் செல்லவும் பிடிக்காமல், தனது தையல் கடைக்குச் சென்று கடையைத் திறக்கவும் பிடிக்காமல், தெரிந்த முகங்களே இல்லாத இடம் நோக்கிச் சென்று, சிறிது நேரம் அமர்ந்திருக்க விரும்பி, கால் போன போக்கில் நடக்க ஆரம்பித்தார்.

மணிக்கூண்டு அருகே செல்லும்போது, ஒரு பெரிய ஊர்வலம் எதிரே வந்து கொண்டிருப்பதைப் பார்த்து, யாராவது தெரிந்தவர்கள் வருவார்களோ, பையனைப் பற்றி எதுவும் கேட்பார்களோ என்ற அச்சத்துடன் ஒரு மரத்தின் பின்வால் சென்று மறைந்து கொண்டு ஊர்வலத்தைப் பார்த்தார்.

ஏதோ ஒலிம்பிக்கில் ஓடி தங்கப் பதக்கம் வாங்கி, இந்தியத் திருநாட்டின் பெருமையை உலக அரங்கில் உயர்த்தி விட்ட பெருமிதத்துடன், கழுத்தில் மாலையுடனும், கையில் பூச்செண்டுடனும் அவருடைய பையன் சமதர்மன், ஊர்வலத்தின் முன்னே நடந்து வர, அவனுடைய வயதை ஒத்த பையன்கள் நூற்றுக்கும் அதிகமான எண்ணிக்கையில் ஒரு நடிகரின் பெயரைச் சொல்லி வாழ்க என்றும், பாடலை ஒளி பரப்பாத தொலைக்காட்சி நிலையம் ஒழிக என்றும் கோஷமிட்டவாறு ஊர்வலம் வேகமாகச் சென்று கொண்டிருந்தது.

ஊர்வலம் முழுவதுமாய்க் கடந்து சென்ற பிறகு மறைவில் இருந்து வெளியே வந்தார்.

கண்கள் கலங்கி இருந்தன. கண்களைத்



"உன் பிச்சைக்காக மாமூல் யாருக் குடா வேணும்? உன்னை எப்.ஐ.ஆர். போட்டு உள்ளே தள்ளுகிறேன் பாரு, நடடா ஸ்டேஷனுக்கு'ன்னு போலீஸ் காரர் சொல்லிட்டாரு!"

"அப்புறம்?"

"நல்லவேளை! பாதி தூரம் போனதும் அவருக்குப் போதை தெளிஞ்சி போச்சு. மாமூலை வாங்கிட்டு விட்டு விட்டாரு!"

"ரமேஷ் கண்ணா! நீ அப்பா கட்சியா? அம்மா கட்சியா? சொல்லு!"

"நானே தனியா ஒரு கட்சி ஆரம் பிக்கப் போறேன், டாடீ!"

– ராமநாதன்



துடைத்துக் கொண்டார்.

என்ன செய்வது என்று தெரியாமல் சிறிது நேரம் திகைத்து நின்று, ஊர்வலம் போன திசையிலேயே மெதுவாக நடக்கத் தொடங்கினார்.

'இதுக்காகவா பிள்ளை! திரைப்படப் பாடலை ஒலிபரப்பாதது அவ்வளவு பெரிய தப்பா? அதற்கு எதிர்ப்புத் தெரிவிக்க இவ் வளவு கூட்டமா? சினிமாதான் சகலமுமா? எங்கே ஆரம்பித்தது இந்தத் தவறு?'

அவரையும் அறியாமல் மிகவும் சத்த மாய் வார்த்தைகள் வெளிவந்தன.

தெருவில் சென்று கொண்டிருந்த சிலர் அவரைத் திரும்பிப் பார்த்ததன் காரணத்தை நினைத்துச் சிரித்துக் கொண்டார்.

மெதுவாக நடந்து வந்து கடையைத் திறந்து, தையல் மெஷினில் அமர்ந்தும் வழக்கம் போல் அவரால் வேலையில் கவனம் செலுத்த முடியாமல், குற்ற உணர்வு இதயத்தை அழுத்த, சுய இரக்கத்துடன் தெருவைப் பார்த்தவாறே அமர்ந்திருந்தார்.

'கொள்கை இருந்த காலத்திலே லட்சியம் இருந்துச்சு. லட்சியம் இருந்ததா லேயே நாணயம் இருந்துச்சு. நாணயம் இருந்ததாலேயே அரசியல் நாகரிகமும் இருந்துச்சு. இப்ப பணத்துக்காகத்தான் அர சியல்னு ஆகிப்போச்சு. பதவிக்காகவும், புகழுக்காகவும் எதையும் செய்ற வெறியும், வேட்கையும் தான் இப்ப மிச்சம் இருக்கு. என் மகனை மாதிரி படிச்ச பையன்களும் கூட இதுக்கு விலக்கு இல்லை.'

நினைத்து நினைத்துக் கொதித்துக் கொண்டிருந்தார்.

"அண்ணே எங்கேயெல்லாம் உங் களைத் தேடுவது. இன்னிக்கு ராத்திரி மிச்ச முள்ள கவரெல்லாம் முடிச்சிட்டு, ஆர்ச்சை யும், கட்அவுட்டையும் வச்சிடுவோமா? இன்னும் இரண்டு நாள்தானே இருக்கு..." கேட்டுக் கொண்டே குமார் கடைக்குள் வந் தான்.

"இல்ல தம்பி, இனிமே நான் வரலை. நீயே பாத்துக்க."

"ஏண்ணே உடம்புக்கு முடிய லையா?"

"இல்ல, இனிமே நான் வரமாட் டேன்."

"என்னண்ணே என்னமோ மாதிரி பேசு றீங்க?"

"எல்லாம் வெறுத்துப் போச்சு. இனிமே நான் எங்கேயும் வரமாட்டேன். என்னை எதுக்கும் கூப்பிடாதே."

"ஏண்ணே தம்பி தலையெடுத் தாச்சேன்னு பாக்குறீங்களா..."

"ஏய் இப்ப நீ போறியா இல்லையா..."

பெரியவரின் அதட்டலைக் கேட்டதும் அவன் பயந்து போனான். வேகமாக கடையை விட்டு வெளியேறினான்.

'என்ன ஆச்சு இவருக்கு. ஏன் இப்படி வெறுத்துப் போய்ப் பேசறாரு. ஒரு வேளை பையன்கூட போயிடலாமுன்னு பாக்கிறாரோ? இருக்கலாம். எப்படி இருந்தா என்ன? பெரியவர் கட்சியில இல் லைன்னா நம்ம காட்ல மழைதான்! எப்படி யும் இப்ப கையில இருக்கிற பணத்துல நிறைய மிச்சம் புடிச்சிடலாம். பணம் பத்த லைன்னு கட்சியில இருந்து கூடக் கொஞ்சம் கேட்டு வாங்கிக்கலாம். இவரு கூட இருந்தா சுத்தமா கணக்குக் கொடுக் கணும்பாரு. இப்பத் தொல்லை விட்டுது... இனி நம்ம ஏரியாவுல நாமதான் தலை வர்.... நாம வெச்சதுதான் சட்டம்...'

அவன் தலைவராகிவிட்ட உற்சாகத்தில் நடக்க ஆரம்பித்தான்!

STUDY AT HOME

# NOW YOU CAN DECORATE YOUR HOME

## THE WAY YOU LIKE IT

JOIN

# INTERIOR DECORATION

CORRESPONDENCE COURSES

- Study in your own free time
- No minimum qualification needed
- Course fee payable in easy instalments
- No need to buy costly books
- Study material prepared by experts
- Choice of Hindi medium also

ADMISSION OPEN

Here in my town I have used my skills to decorate a shop with your course help. I am totally satisfied and I feel proud by the feed-back I am getting from the public.
— M.C. Ravi, (engineer) Karnataka

I enjoyed doing it. I thank you for it and hope that in future many students will be benefited by this course.
— Seema S. Chawla, Latur, Maharashtra

The Interior Decoration course has been very useful to know about interior decoration in detail. The lessons are very informative, short and to the point. Surely it'll help me a lot in my profession.
—J. Sukumar (b. arch.) Architect, Madurai

Fortunately, my sister bought a flat in a new building I got chance to suggest about kitchen counter to curtains. On the 'Grahparvesh' day every one praised the planning and decoration of the home. My sister pointed towards me for all the credit. I felt proud. But I offer all the credit to your Interior Decoration course and you. Thanking you once again.
— Shobha S. Shetty, Miraj

AID

For details send a self addressed envelope to
ACADEMY OF INTERIOR DECORATION
10A/14, SHAKTI NAGAR, DELHI-110 007

NEED WE SAY MORE

---




## தபாலில் ஆங்கில பயிற்சி

## எல்லோருக்கும் புரியும்

## எளிமையான பாடங்கள்

## ஆயிரக்கணக்கானோர் அமெரிக்கன்

## இன்ஸ்டிட்யூட்டில் படிக்கும் காரணம் இதுவே.

பள்ளியிலும் கல்லூரியிலும் ஆங்கிலம் படிப்பது கடினம் என்று அலுத்துக் கொண்டவரா நீங்கள்? தலைச்சுமை போன்ற ஆங்கில பாடத்தை பார்த்து அசந்தவரா நீங்கள்? தபால் மூலம் படிக்க விரும்பியும் மேற்கண்ட காரணங்களால் போதுமே! ஆங்கில பயிற்சி என்று விட்டவரா நீங்கள்? இதற்கெல்லாம் இனி கவலைப்படத்தேவையில்லை.

5ஆம் வகுப்பு படித்தோர் கூட புரிந்து கொள்ளக்கூடிய வகையில் - பட்டம் பெற்றோரும் கூட பாராட்டத்தக்க வகையில் - இனிமையாகவும் - எளிமையாகவும் - பாடத்திற்கு பாடம் விறுவிறுப்பான சினிமா காட்சி போல பக்கங்களை புரட்டி படிப்பீர்கள். அலுப்பே தட்டாது ஆங்கிலத்தில் மிகச்சிறந்த மேதை ஆவீர்கள்.

மொத்தமாக செலுத்தினால் ரூ. 130 or தவணை முறை என்றால் 5 மாதங்களில் ரூ. 150 வீதம் செலவாகும்.

### அக்கவுண்டன்சி பயிற்சி

(கணக்கர்)

வெளி நாட்டிற்கும் வெளி மாநிலங்களுக்கும் தமிழ் நாட்டிலும் ஏராளமான அக்கவுண்டண்ட்கள் தேவைப்படுகின்றனர். இது சுய வேலை வாய்ப்பு பயிற்சி மாதம் ரூ. 7000 வரை சம்பாதிக்கலாம். நாளேடு, பேரேடு பதித்தல், ஐந்தொகை எடுத்தல், லாப நஷ்ட கணக்கு, பில் டிஸ்கவுண்டிங், செக் டிஸ்கவுண்டிங், இன்கம்டாக்ஸ், சேல்ஸ்டாக்ஸ் போன்ற சகல அம்சங்களும் தமிழில் தபாலில் கற்றுத்தரப்படும். தாங்கள் எந்த பயிற்சியில் சேர வேண்டும் என்பதை ஒரு தபால் கார்டில் எழுதி அனுப்பினால் தங்கள் வீடு தேடி ப்ராஸ்பக்டஸ்ம் விண்ணப்பப்பாரமும் வந்து சேரும்.

**தி அமெரிக்கன் இன்ஸ்டிட்யூட்,**
எல்லிஸ் நகர், மதுரை-625 016

இந்த இளைஞருக்கு இயற்கைச் சூழலும், பசுமைச் செடிகொடிகளும், திறந்த வான் வெளியும், பாயும் நதிகளும் இருந்துவிட்டால் போதும். அவற்றோடு ஐக்கியமாகி விடுவார்! அதனால்தானோ என்னவோ அட்வர்டைசிங் துறையை விட்டு விட்டு அட்வெஞ்சர் ஸ்போர்ட்ஸ் துறைக்கு வந்து விட்டார்.

''நான் ரிக்கி டிக்கி டாவி ஆரம்பித்த பிறகு, மலையேறும் பயிற்சியிலும், ஹேங் க்ளைடிங்கிலும், விண்ட் சர்ஃபிங்கிலும் எத்தனையோ இளைஞர்களும், பெண்களும் பயிற்சி பெற்று விட்டார்கள். பத்து வயதுப் பையனை முதலில் எழும்பூரில் ஓர் அடுக்குமாடிக் . பயிற்சி கொடுக்கிறார்கள்!

இதற்காகவே அந்த வீட்டின் கவர்க கொள்ள வசதியாக அமைத்திருக்கிறார். ர பேர் பயிற்சி பெறுகிறார்கள் இப்போது கொடுக்கப்படுகிறது.

கிழக்குக் கடற்கரையில் முதலாவது டு நடத்தியவர் நீபாங்கர். ஒவ்வு நேர விளை பிடிப்புகள் ஆகியவற்றுக்காக, டியூக் அ வழங்கப்பட்டது.

முட்டுக்காடு, புலிக்காட், ஏரிகள் தவி



● விண்ட் சர்ஃபிங்....



முதன் முதலில் இந்தியாவில் ஹேங்கிளைடிங் பயிற்சி கொடுத்துப் பறக்க வைத்தவன் நான்!'' என்கிறார் நீபாங்கர் கோஷ்.

முட்டுக்காடு ஏரியில் விண்ட் சர்ஃபிங் பயிற்சிக்கு நிறைய குடும்பத் தலைவிகள் கூட வந்திருந்தார்களாம். ''இந்த மாதிரி வீரசாகச விளையாட்டுக்களில் பங்கு பெற முடியும் என்று அவர்கள் நினைத்துக் கூடப் பார்த்திருக்க மாட்டார்கள்!''

மலைப் பாதையில் நடக்கும் 'டிரெக்கிங்' பயிற்சியில் ஏழு வயதுப் பையன்கூடக் கலந்து கொண்டிருக்கிறானாம். மலை ஏறும் பயிற்சி எனப்படும் மவுண்ட்டனீரிங்கில்,

டத்திலிருக்கும் ஃபிளாட்டில் ஆரம்பப்

கற்களைப் பதித்து, கால்களை ஊன்றிக் க்ளைம்பிங் பயிற்சி இது. இதில் முப்பது ப்பது அடி உயரச் சுவர்களில் பயிற்சி

ர்நேஷனல் வின்ட் சர்ஃபிங் ரெக்கார்டை ட்டுக்களில் பயிற்சி, அதில் புதிய கண்டு டின்பரோ தங்கப் பதக்கம் நீபாங்கருக்கு

நீலகிரியில் பைக்காராவிலும் நீர் விளை

தி
க்கி
பாவி!



* டிரெக்கிங்....



யாட்டுக்களைத் துவங்கத் திட்ட மிட்டிருக்கிறார். அரசின் ஒப்பு தல் கிடைக்கக் காத்திருக்கிறார்.

ஊட்டியில் ஹேங்கிளைடிங் பயிற்சிக்கு வகுப்புகள் நடத் துகிறார் நீபாங்கர். நல்ல தேக ஆரோக்கியமும், கண் பார்வை யும் இதற்கு அவசியம். இதயம், மூச்சுக் குழல், இவை சரியாக இயங்குகிறதா என்று முன்பா கவே பரிசோதிக்க வேண்டும்; தலைசுற்றல், திடீரென்று கண் கள் இருண்டு போதல் இவை அறவே இல்லை என டாக்டர் கள் உறுதிப்படுத்த வேண்டும்.

* ஹேங் க்ளைடிங்....

''அட்வெஞ்சர் ஸ்போர்ட்ஸ்களுக்கு முறையான பயிற்சி அவசியம்... ஓர் அமைச்சரின் மகன், இரண்டாம் நாளே வானத்தில் பறக்க முடியும் என்று நினைத்துக் கொண்டு வந்தார்! அதற்கெல்லாம் நான் இடம் கொடுப்பதில்லை.''

மத்திய அரசின் டூரிசம் துறையும், தமிழ் நாடு அரசின் சுற்றுலா மற்றும் வனத் துறைகளும் நீபாங்கரின் அமைப்புக்கு உதவிகள் அளித்து வருகின்றன.

நீபாங்கரின் அமைப்புக்கு, கேப்டன் மோகன் சிங் கோஹ்லி முக்கிய ஆலோசகர். இவர் எவரெஸ்ட் சிகரத்தைத் தொட்டவர். இந்திய மலை ஏறும் பயிற்சி நிலையம் மற்றும் இமாலயச் சுற்றுச் சூழல் டிரஸ்ட்டின் தலைவர்.

ஓகி நெல்சன் என்னும் ஸ்வீடன் நாட்டுப் பயிற்சியாளர், நீபாங்கருடன் இணைந்து பயிற்சிகள் அளிக்கிறார், மலை ஏற்றத்தில்.

இந்த மே மாதம் கர்வால் இமாலயப் பகுதியில் உள்ள ஸ்வர்க்க ரோகிணி சிகரத்துக்குப் பயிற்சியாளர்களை அழைத்துச் செல்லுகிறார் நீபாங்கர். இதை 'பாண்டவா எக்ஸ்பெடிஷன்' என்கிறார். யுதிஷ்டிரர் இங்கிருந்துதான் மோட்சம் அடைந்தாராம்!

''எத்தனையோ இளைஞர்கள் மது, போதை மருந்து என்று அடிமையாகிறார்கள்; இதைத் தவிர்க்க இது போன்ற வீர விளையாட்டுக்களில் வாலிப உள்ளங்களின் கவனத்தைத் திருப்ப வேண்டும்'' என்கிறார் நீபாங்கர்.

– சித்தார்த்



''டாக்டர், என் வயத்துல பிளேன் ஓடற சத்தம் கேட்குது...!''

''பிளேன்னு மொட்டையா சொன்னா எப்படி, ஏர் பஸ்ஸா, போயிங்கா...?''

● ● ●

''வயறு சம்பந்தப்பட்ட வியாதிக்கு வேற டாக்டர்கிட்டே போகச் சொல்றாரே...?''

''எம். பி. பி. எஸ். பரீட்சைல அந்தக் கேள்விகளை 'சாய்ஸ்'ல விட்டிருப்பார்!''

● ● ●

''அப்பா, நான் யாரையோ கொல்ற மாதிரி அடிக்கடி கனவு வருது...!''

''அப்போ உனக்கு மெடிகல் சீட்டு கிடைக்கப் போகுதுன்னு அர்த்தம்...!''

● ● ●

''வாயைத் திறங்கன்னு சொன்னதும் வாயை உடனே திறக்கணும். திறந்து வைக்க மந்திரியைக் கூப்பிட முடியுமா, என்ன?''

– ராதா வாசுதேவன்

''உங்க பையனுக்கு ஏன் 'விலைவாசி'ன்னு பேர் வச்சிருக்கீங்க?''

''அப்பவாவது அவன் 'உயர்வானா'ன்னு பார்க்கத்தான்!''

– ஆர். உமா



# மதிப்பில் உயரப்போகும் பங்குகள்!

மூலதனம் கோரி பங்கு மார்க்கெட்டுக்கு வரும் சில நிறுவனங்களின் அறிமுகப்படலம் தொடர்கிறது. இவற்றில் முதலீடு செய்து பெறப்படும் பங்குகளின் மதிப்பு நாளடைவில் உயர்கின்ற வாய்ப்பு உண்டு.

## LANCO FERRO LTD.

செகந்திராபாத்தில் தொடங்கப்படும் புதிய நிறுவனம். இதனை நிர்வகிப்பவர்களிடம் நம்பிக்கை கொண்டு, 'ஆந்திரப் பிரதேச தொழில் அபிவிருத்திக் கழகம்' மற்றும், 'ஆசிய நிதி, முதலீட்டுக் கழகம்' ஆகியனவும் பங்கேற்கின்றன. பின்னது, 'ஆசிய அபிவிருத்தி வங்கி'யால் தோற்றுவிக்கப்பட்ட கழகமாகும். ஆண்டொன்றுக்கு 90,000 டன் இரும்பு உற்பத்தி செய்வது என்பது இலக்கு. இந்த இரும்பு, பல வார்ப்படங்களுக்கும், இரும்புக் குழாய்கள் தயாரிப்புக்கும், மோட்டார் கார், விவசாய உபகரணங்கள் போன்றவற்றுக்கும் மூலப் பொருளாக அமைகிறது. மொத்தம் 54 கோடி ரூபாய் முதலீடு தேவைப்படுகிறது. IDBI போன்ற நிதி நிறுவனங்கள் பல, கணிசமான அளவில் கடன் வழங்குகின்றன. நிர்வாகிகளே ஏற்றுக் கொள்ளும் பங்குகள் போக பொது மக்களுக்கு ஒன்பது கோடி ரூபாய்க்குப் பங்குகள் வழங்கப்படுகின்றன. ஜூலை 94 ல் உற்பத்தி தொடங்க, மூன்றாம் ஆண்டிலிருந்து நல்ல லாபம் காண முடியும் என்று கருதப்படுகிறது. கூடுதல் விலை ஏதும் இன்றி பங்குகள் பத்து ரூபாய்க்கே விநியோகமாகின்றன. நம்பகமான முதலீடு.

## NEO INTEX MILLS LTD.

பருத்தி நூல் உற்பத்திக்காகத் திண்டுக்கல்லில் நிறுவப்பட்டுள்ள ஆலை. இந்த நிறுவனம் 1982 லிருந்தே 300 லட்சம் ரூபாய் மூலதனத்தில் பருத்தி நூல் உற்பத்தியில் ஈடுபட்டு வந்திருக்கிறது. பருத்தி நூலுக்குத் தேவை அதிகரித்துக் கொண்டே போவதால் இப்போது விரிவாக்கத்தில் இறங்கியுள்ளது. இதற்குத் தேவைப்படும் 400 லட்சம் ரூபாயில் 300 லட்சத்தைப் பொது மக்களிடமிருந்து எதிர்பார்க்கிறது. பங்குகள் கூடுதல் விலை இன்றி ரூ. 10 க்கே விநியோகமாகின்றன. நிறுவனத்தின் கடந்த காலச் செயல்பாடு திருப்திகரமாக உள்ளது. இந்நூற்பாலை, பருத்தி உற்பத்தியாகும் மதுரை வட்டாரத்தின் மையத்தில் உள்ளது. 1994, ஜூன் மாதத்தில் விரிவாக்கத் திட்டத்தின் அடிப்படையில் உற்பத்தி தொடங்கிவிடும். பங்குகளின் மதிப்பு கணிசமாக உயரும் வாய்ப்புண்டு.

## KRISHNA SYNTHETICS LTD.

புது தில்லியில் தலைமையகம் கொண்டுள்ள இந்த நிறுவனம், 'பாலியெஸ்டர்' மற்றும் 'நைலான்' இழைகள் உற்பத்தி செய்து, ஏற்கெனவே லாபகரமாக நடந்து வருகிறது. இந்தத் தயாரிப்புகளுக்குத் தேவை அதிகரித்துக் கொண்டே போவதால் விரிவாக்கத்தில் இறங்கியுள்ளது. இதற்குத் தேவைப்படும் ரூ. 293 லட்சத்துக்குப் பங்குகள் விநியோகமாகின்றன. நிறுவன நிர்வாகிகளே ரூ. 18 லட்சத்துக்குப் பங்குகளை ஏற்க, பாக்கி ரூ. 275 லட்சத்துக்குப் பங்குகள் பொதுமக்களைச் சென்றடையும். இதில் அயல்நாடுகளில் வாழும் இந்தியர்களுக்கு ஒதுக்கியது போக உள்நாட்டில் 15,80,000 பங்குகள் ஒவ்வொன்றும் ரூ. 10 விலைக்கே விநியோகமாகின்றன. இந்த நிறுவனத்தின் தயாரிப்புகளுக்குக் கிராக்கி இருப்பதால், கணிசமான லாபம் எதிர்பார்க்கப்படுகிறது.

## GARWARE SYNTHETICS LTD.

ஷேவிங் பிரஷ், பல்தேய்க்கும் பிரஷ், மீன் பிடிக்கும் வலைகள் முதலியவற்றில் பயன்படும் நைலான் நார் முடி உற்பத்தியில் இந்தப் பம்பாய் நிறுவனம் கடந்த 25 ஆண்டுகளாக ஈடுபட்டு வருகிறது. இதற்கான மொத்த மார்க்கெட்டில் ஐம்பது சதவீதத்தை இந்த நிறுவனமே பூர்த்தி செய்கிறது. இப்போது இந்த நிறுவனம் இளை விட்டு, விவசாயத்துறையில் சொட்டு நீர்ப்பாசனத்தில் கவனத்தைத் திருப்பியுள்ளது. இதற்காக ரூ. 350 லட்சம் மூலதனம் கோரி பொது மக்களிடம் வருகிறது. ஒவ்வொரு பங்கையும் ரூ. 5 கூடுதல் விலை தந்து ரூ. 15 க்குப் பெற வேண்டும் என்றாலும் இந்த நிறுவனம் ஏற்கெனவே லாபகரமாக இயங்கி வருவதால் புதிய முயற்சியிலும் வெற்றி பெறும் என்று நம்ப இடமிருக்கிறது. ஓரளவு சேமித்து வைத்திருப்பவர்கள் அதன் மதிப்பைப் பெருக்கிக் கொள்ள இந்த நிறுவனங்களில் முதலீடு செய்யலாம்.

– வி. கோபாலன்

**19**

**பார்த்த உடனே அவளைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். இவள் எனக்குத்தான் என்பது என் மனதில் அப்போதே தெரிந்து விட்டது.**



**சுஜாதா**

காயத்ரியின் கணவர் தாமோதரன். சொந்த ஊர் பாலக்காட்டுப் பக்கம். தமிழில் மலையாள உச்சரிப்பு கொஞ்சம் இருந்தது. ஆனால் ஜானகிராமன், லா.ச.ரா. என்றெல்லாம் பேசினார். தமிழ் இலக்கியத்தில் நிறைய பரிச்சயம் உள்ளவர் போலத் தோன்றினார். எனக்கு ''விருட்சம்'' கவிதைகள் கொடுத்தார்.

காயத்ரி 'கரேஷ் கரேஷ்!' என்று அடிக்கடி பெருமையாகச் சொல்லிக் கொண்டிருந்தாள். இப்போதே அப்பாவின் கம்ப்யூட்டரை ஆன் பண்ணுகிறானாம். பெரியவர்களுக்கு ஈடுகொடுத்துப் பேசுகிறானாம். ராகம் கண்டு பிடிக்கிறானாம். கீதையில் ச்லோகங்களும் பாரதியார் பாட்டும் சொல்கிறானாம்.

எல்லா வீட்டிலும் எல்லாக் குழந்தைகளும் மூணு வயசு வரை ஜீனியஸ் என்று சொன்னதை காயத்ரி ரசிக்கவில்லை. நமக்கென்ன என்று சும்மா இருந்து விட்டேன்.

''அர்ஜுன் சின்ன வயசில் எப்படி?'' என்று ஒருநாள் மத்தியானம் கேட்டேன். ''அவன் எப்போதுமே இண்டிபெண்டண்ட். மற்ற பேர்கள் வேறு வேறு சர்க்கார் வேலைக்குப் போன போது, இவன் மட்டும் சொந்தமாக பிஸினஸ் ஆரம்பிக்கப் போகிறேன் என்றான்.''

''நான் வேலை விஷயத்தைப் பற்றிக் கேட்கவில்லை. சின்ன வயசில் மாணவப் பருவத்தில் எப்படி இருப்பார்?''

''எப்படி என்றால் தோற்றமா? கொஞ்சம் ஒல்லியாகத்தான் இருப்பான். கிரிக்கெட் ஆடுவான்'' என்றாள்.

''பெண்கள் சினேகிதம் ஏதாவது இருந்ததா? நீங்கள் என்னிடம் ஃப்ராங்காக இருக்கலாம்.''

''பெண்கள் என்றால் அவன் எப்போதுமே ஜாலியாக, கல்மிஷமின்றிப் பேசிக் கொண்டிருப்பான். கல்யாணங்களில் கலாட்டா பண்ணுவான். மற்றபடி காதல், லவ் லெட்டர் எல்லாம் எழுதினானா என்றால் அது இல்லை. அப்போதே சின்ன வயசிலேயே பேப்பர் போட்டு அல்லது காலேஜ் மாகஸினுக்கு விளம்பரம் வாங்கி கமிஷன் சம்பாதித்து, சைக்கிள் வாங்கிக் கொள்வது, ட்ரீட் கொடுப்பது... இப்படியே பண விஷயத்தில் கருத்தாக இருந்தான். ஏன் குறிப்பா பெண்களைப் பற்றி கேக்கறே?''

''கீதாவுடன் அவருக்கு என்ன மாதிரியான சினேகிதம் என்று என்னால் கணிக்க முடியவில்லை.''

''சே, சே! நீ நினைத்துக் கொள்கிற மாதிரி எல்லாம் இல்லை. தப்பாகக் கற்பனை பண்ணிக் கொள்ளாதே. கீதா அவனுக்கு மற்ற ஆபீஸ் அஸிஸ்டண்டு போலத்தான். அதற்குமேல் அவன் உன்னைப் பற்றி என்ன எழுதியிருக்கிறான் தெரியுமா? அந்த லெட்டரை இன்னும் வைத்திருக்கிறேன் பாரு'' என்று பழைய ட்ரங்கு பெட்டியி

லிருந்து ஒரு பெட்டியை எடுத்து, அதிலிருந்து கடிதங்களை எடுத்துக் கொடுத்தாள். பெரும் பாலும் இவர் எழுதிய கடுதாசிகள்தான்!

''பிற்காலத்தில் பயன்படும் என்று வைத்திருக்கிறேன். படித்துப்பார், தமாஷாக இருக்கும்! நீயும் அந்த மாதிரி செய்ய வேண்டும். அர்ஜுன் உனக்குக் கடிதம் எழுதியிருக்கறானோ?''

''எங்கே? நாங்கள், அடுத்த ரூமிலிருந்து கடிதம் எழுதிக் கொண்டால் தான்! பிரியவே இல்லையே!'' என்று சிரித்தேன்.

அர்ஜுன் காயத்ரிக்கு எழுதியிருந்த கடிதம் எனக்கு சுவாரஸ்யமாக இருந்தது.

''டில்லியில் அந்தப் பெண்ணைப் பார்த்தேன். பெயர் ரேகா. நல்ல சிவப்பு என்று சொல்ல முடியாது. ஆனால் மாநிறமும் இல்லை. கொஞ்சம் கொஞ்சம் நம் ரஞ்சனா போல இருக்கிறாள். உயரம் ஜாஸ்தி. எனக்கு அருகில் நின்றால் பொருத்தமாக இருக்கும். ரொம்ப அருமையான, அழகான பெண். பார்த்த உடனே அவளைத்தான் கல்யாணம் பண்ணிக் கொள்வது என்று தீர்மானித்து விட்டேன். இவள் எனக்குத்தான் என்பது என் மனதில் அப்போதே தெரிந்து விட்டது. காயு நீ அப்பாவிடம் ஸ்ட்ராங்காக சொல். லௌகிக விஷயங்களைச் சீக்கிரம் முடித்துக் கொள்ளச் சொல். வரதட்சணை எல்லாம் கேட்கச் சொல்லாதே. அது இந்தக் காலத்தில் அபத்தம். நான் என்னைச் சுற்றிலும் பார்க்கும் பெண்களை நினைக்கும்போது, இவள்தான் நம் வீட்டுக்கும் என் மனத்துக்கும் இசைந்தவள் என்பது தெரிகிறது. அவள் போட்டோவை எப்போதும் என் பர்ஸில் வைத்திருக்கிறேன்.''

''எத்தனை பரிவாக எழுதியிருக்கிறான் பார்.''

''அடிக்கிறாரே!''

''தட்டிக் கொடுத்திருப்பான்.''

''இல்லை அக்கா. வலிக்கிற மாதிரியே அடித்தார்.''





"என்னப்பா! சாமியாராப் போகப் போறதா விறாப்பா போனே...?"
"என்ன செய்யறது! மடத்திலே கேவலம் பிளாக் அண்ட் ஒயிட் டீ.வி. கூட இல்லை!"

- கே.வி.

''வரட்டும் அவன் கன்னத்தில் திருப்பி ஒரு அறை கொடுத்துர்றேன். ரேகா இதை யெல்லாம் பெரிசா எடுத்துக்காதே.''

**தா**மோதரன் மருதமலைக்கு அழைத்துச் சென்றார். கோவையைச் சுற்றிக் காட்டினார். எங்கே பார்த்தாலும் கூட்டமாக இருந்தது. பெரிய ஷாப்பிங் சென்டர்கள் இருந்தும் கார் நிறுத்துவது கஷ்டமாக இருந்தது. நல்ல ஓட்டல்களில் கூட சாப்பாட்டுக்கு வரிசைகள் காத்திருந்தன.

''கோவை பிடித்திருக்கிறதா உனக்கு?''

''சொல்லத் தெரியவில்லை.''

''எங்க ஊருக்கு வரவேண்டும் நீ. கல்பாத்தி ராமநாதன் கேள்விப்பட்டிருக்கிறாயோ? உங்கப்பாவைக் கேட்டால் சொல்வார்.''

காயத்ரி, எனக்கு வேண்டாம் என்று சொல்லியும் ஷிஃபான் ஜார்ஜெட் புடைவை வாங்கிக் கொடுத்தாள். நல்ல விலையில் கனமில்லாமல் இருந்தது. கட்டிக் கொண்டால் உடம்பில் இருப்பதாகவே உணரமுடியவில்லை.

தாமோதரன் என்னை அவருடைய ஃபௌண்டரி ஃபாக்டரிக்கு அழைத்துச் சென்று, மோட்டாருக்கு ஆர்மேச்சர்காயில் சுற்றுவதெல்லாம் விளக்கி, போர் அடித்தார். எல்லாருக்கும் இளநீர் கொடுத்தார். கிருஷ்ணா ஸ்வீட்ஸில் மைசூர்பாக் வாங்கிக் கொடுத்தார். பொள்ளாச்சி டாப் ஸ்லிப் புக்கு ஒருநாள் அழைத்துச் செல்வதாகச் சொன்னார்.

அர்ஜுன் இருமுறை போன் பேசினார்.

''ரேகா எப்படி இருக்கே? கோவை புடிச்சிருக்கா. ரேகா ஐ மிஸ் யு. இப்பவே வந்துரேன். தினம் ஃப்ளைட் இருக்கு. ஈஸ்ட் வெஸ்ட்க்கு போன் பண்ணட்டுமா?''

''வேண்டாம். கொஞ்ச நாள் இருந்துட்டு வரேன்.''

''எத்தனை நாள்?''

''ஒரு வாரமாவது. உங்க அக்கா விடமாட்டேங்கறா. அத்திம்பேர் என்ன என்னவோ ப்ளான் வெச்சிருக்கார். என்னை பாலக்காட்டுக்கு அழைச்சு...''

''கொடு அவர் கிட்ட.''

தாமோதர் அவருடன் பேச ''யோவ் நான் உன் பெண்டாட்டியை அத்தனை சீக்கிரம் விடப் போறதில்லை. இத்தனை அழகான பெண்ணை நீயே பாத்துக்கணும்னு எந்த சாஸ்திரமும் இல்லை!''

இரண்டு பேரும் சிரித்துப் பேசிக் கொண்டார்கள். எனக்குப் பரவசமாக இருந்தது. தின வாழ்க்கையில் இந்த மாதிரி கவிதை கலந்த பாசாங்குகள் தேவைதான். எதற்காக அவருடன் சண்டை போட வேண்டும்?

மீண்டும் போனை வாங்கி ''நீங்க சௌக்யமா?'' என்றேன்.

''அப்பாடா முதல் தடவையா என் பெண்டாட்டி என் சௌக்யத்தைப் பற்றிக் கேட்கிறா!'' என்றார். உற்சாகமாக இருந்தது.

**பா**லக்காட்டுக்குப் போய் ஒருவாரம் கழித்துத் திரும்புவதாகத்தான் இருந்தது. தாமோதரன் அவசரமாகப் பம்பாய் போக வேண்டி அர்ஜுனுக்கு போன் செய்தோம். ராத்திரி ரெயிலில் நானும் காயத்ரியும் சுரேஷும் புறப்பட்டு வந்து விட்டோம். அர்ஜுனே ஸ்டேஷனுக்கு வந்து என்னை அழைத்துச் சென்றார். ஒரு வாரப் பிரிவு அவருக்கு ஏக்கத்தைக் கொடுத்திருந்தது. இளைத்தாற் போலத் தோன்றினார்.

''ஏன் ஷேவ் பண்ணிக்கலை?'' என்றேன்.

''டயம் இல்லை. ஒரு பெரிய இஷ்யு. பிக்கியும் நானும் டெட்லைனுக்குள் எத்தனையோ செய்ய வேண்டியிருந்தது. கீது வேற ஊரில் இல்லையா...''

''அவ எங்க போயிருக்கா?''

''கிளையண்டைப் பார்க்க பம்பாய் போயிருக்கா. உன் சௌக்யமெல்லாம் எப்படி? அத்தி போரடிச்சிருப்பாரே, ஒரு ஹார்ஸ் பவர், ரெண்டு ஹார்ஸ் பவர் என்று!''

''இல்லை'' என்றேன். ''இந்த ஷர்ட் யார் கொடுத்தா?''

தன் சட்டையைப் பார்த்துக் கொண்டு ''புதுசா இது?'' என்றார்.

''ஆமாம் இதுக்கு முன்னாடி இல்லை இது.''

''எங்கயோ வாங்கியிருக்கணும். ஞாபகம் இல்லை.''

ப்ளாட் பாரத்திலிருந்தே என் கையைப் பிடித்துக் கொண்டார். நான் என்னதான் தயக்கம் காட்டியும் கையை இன்னம் இறுக்கிப் பிடித்துக் கொண்டார்.

''காயத்ரி! அப்பா அம்மாவை இந்தத் தடவை நீ கூட்டிக் கொண்டு போய்விடு.''

''அர்ஜுன், இந்தத் தடவை இல்லை. அவர் லாங் டூர் போறார். நானும் கூடப் போகணும்.''

''எப்போ கூட்டிப் போகிறாய்?''

''ஜுலை ஆம்டும். அவா இங்க இருக்கறதில கஷ்டமா அர்ஜுன்?''

''இவதான் சொல்லணும்'' என்று என்னைப் பார்த்தார்.

'' நான் என்ன சொல்வது? இது உங்க ஃபேமிலி விஷயம்'' என்றேன், படாமல்.

அர்ஜுன் என்னை ராத்திரி டிரைவ் இன் ஓட்டலுக்கு அழைத்துச் சென்று நிறைய நார்த் இண்டியனும் போட் போல ஐஸ்க்ரீமும் வாங்கிக் கொடுத்தார். சந்தோஷத்தில் திக்கு முக்காடினார். நான் சொன்ன சின்ன ஜோக்குக்கெல்லாம் பெரிசாகச் சிரித்தார். என்மேல் வெளிப்படையாக அன்பைக் காட்டும் விதத்தில், நாலு பேர் முன் என் கன்னத்தில் முத்தம் கூட கொடுத்தது எனக்குச் சங்கடமாக இருந்தது.

''இதெல்லாம் வீட்டில் போய் வெச்சுக்கலாமே!''

''என் பெண்டாட்டி; நான் முத்தம் கொடுப்பேன்!'' என்றார்.

''முத்தமும் கொடுப்பாங்க, அடிக்கவும் அடிப்பாங்க...''

''பாரு ரேகா! அதை சொல்லிக் கடுப்பேத்தாதே. அதெல்லாம் போச்சு. நீ பார்க்கிறது புது அர்ஜுன். உன்னைவிட்டு ஒரு தரம் பிரிஞ்சிருந்ததாலேதான் உன் நிஜமதிப்பும் தேவையும் எனக்குப் புரிஞ்சுது. இனிமே நீ சொல்றதுதான் இந்த வீட்டில். நீ, அப்பா அம்மாவை வேண்டாம் இருக்காதேன்னு சொன்னா அடுத்த கணம் அவா புறப்பட்டாகணும். உன்னோடதான் என் வாழ்க்கை பூரா நான் கழிக்கணும். அதுக்கு உன் சந்தோஷம், திருப்தி எல்லாம் முக்கியம். அது இந்த மரமண்டைக்குப் புரிய இத்தனை நாளாச்சு.''

எனக்கு இந்த அதீத அன்பும் பரிவும் புரியவில்லைதான். அர்ஜுன் கொஞ்சம் அதிகப்படியாவே கொஞ்சுகிறார் என்பது போல் தோன்றியது.

''என்ன இத்தனை மாறிப் போயிட்டீங்க!''

''மாறுதல் இல்லை கண்ணு, தெளிவு!''

இரவு இரண்டு முறை எழுப்பினார்.

மாமியாரும் காயத்ரியும் சமையல் அறையில் தாழ்வாக பேசிக் கொண்டிருந்தவர்கள் நான் உள்ளே போனதும் நிறுத்தி பொதுவாக கிரிக்கெட், வெயில் என்று திசை திருப்பினார்கள். மாமனார் ஹிந்து 'ஆபிச்சுவரி'களை சுவாரஸ்யமாகப் படித்துக் கொண்டிருக்க, சுரேஷுக்கு பதினைந்து நிமிஷத்துக்கு ஒரு காகிதக் கப்பல் செய்து காட்ட வேண்டியிருந்தது. மைக்கூடு, ஏரோப்ளேன் எதும் வேண்டாம் என்று சொல்லி விட்டான்.

அவருடைய புதிய சட்டையைத் தோய்க்கப் போடும் போது, ஒரு சீட்டு இருந்தது.

'அர்ஜுனுக்கு பாலா' என்று எழுதியிருந்தது. பாலா யார் என்று கேட்டபோது ஆபிசில் பாலசுப்பிரமணியன் என்பவர் தன் பதவி உயர்வுக்காகக் கொடுத்தது அந்தச் சட்டை என்று தெரிந்தது.

''டிஸைனர் ஷர்ட்டு. நல்லா இல்லை? பாலாவுக்குத்தான் இந்தமாதிரி சட்டையெல்லாம் எங்க கிடைக்கிறதென்று தெரியும்'' என்றார்.

சட்டென்று அர்ஜுனை ஆச்சரியப் படுத்த வேண்டும் என்று தோன்றியது. நானும் அவருக்கு அபாரமான ஒரு சட்டை வாங்கிக் கொடுத்தால் என்ன என்று ஆபீசுக்கு போன் பண்ணி, பாலசுப்ரமணியம் என்பவரை கூப்பிடச் சொன்னேன்!

''அப்படி யாரும் இல்லையே, இந்த ஆபிசில்!'' என்று பதில் வந்தது.

அர்ஜுனைக் கேட்டதில், பாலசுப்பிரமணியன் ம்யூச்சுவல் ஃபண்டு ஆபிசில் வேலை செய்வதாகத் தெரிந்தது. ''என்ன விஷயம்?''

''உங்களுக்கு ஒரு ஷர்ட் வாங்கணும்னு ஆசை. அந்த டிஸைனர் ஷர்ட்!''

''அதுவா டி.டி.கே. ரோடில ஒரு ஷாப்ல இருக்கு. எதுக்கு இதெல்லாம் ரேகா? வேண்டாம்.''

''எதுக்கு வேண்டாம்?'' என்றேன் பிடிவாதமாக. முதல் தடவையாக உங்க மேல ஒரு இது...இது...''

''எது?''

''காதல். சொல்லத் தெரியலை...''

''காதலா?''

''ம்ஹூம்...பிடிப்பு'' என்றேன்.

(தொடரும்)



ஆசிரியை : 'வாய்மை' என்றால் என்ன?

மாணவன் : 'லிப்ஸ்டிக்' மேடம்!

– சம்பத் குமாரி



* சுகன்யா: ஆடுவதற்குத் தயார்!

'கல்நாயக்' படம் தமிழிலும் தெலுங்கிலும் தயாராகிறது. இயக்கம் ஏ.ஜெகந்நாதன். பெயர். 'மூன்று துருவம்.' பிரபல ரவிக்கைப் பாடலுக்கு சுகன்யாவும் பல்லவியும் ஆடுகிறார்கள். அதே மெட்டுக்கு மரகதமணி இசையில்,

# கமலின் ஜனரஞ்சகப் படம்!

சிறந்த பிராந்திய மொழிப் படமாக 'மகாநதி' விருது பெற்றாலும், ரசிகக் கண்மணிகளுக்கு அது அழுகைப் படமாகவே அமைந்துவிட்டது. அதனால் அடுத்த படத்தைத் தேன் சிந்தும் - காதல் மணக்கும் - மனம் மயக்கும் - ஜனரஞ்சகக் கதம்பமாகத் தயாரிக்கிறார் கமல். இந்தப் படம் முழுக்க முழுக்க லண்டனில் எடுக்கப்பட இருப்பதால், டிசம்பர் மாத பனிக்கு முன் வெளிநாடு போய், ஒரே ஷெட்யூலில் படத்தை முடிக்கிறார் கமல். சாந்தனுஷொரே என்ற இந்தி இயக்குனர் இயக்க, தமிழிலும் இந்தியிலும் ஒரே சமயத்தில் எடுக்கிறார்கள்!

போதை வரிகளை எழுதும் பேறு வாலிக்கா, வைரமுத்துவுக்கா தெரியவில்லை. சூடான வரிகளை எழுத இப்போது யார்தான் மறுக்கப் போகிறார்கள்?



* இளையராஜாவின் இசையில் திருவிழாவும் வளையல்கூட்டியும்

## மாயாபஜார்

இடம்: பார்க் ஷெராட்டன் நட்சத்திர ஓட்டல். ராஜ் ஃபிலிம்ஸ் இன்டர்நேஷனல் வழங்கும் ராஜா - ராணி படத்தின் ஆரம்ப விழா. அத்தனையும் நட்சத்திரம் கூட்டம்.

வெள்ளை தாடி சுத்தமாக மழிக்கப்பட்டு, க்ரீம் நிற குர்தாவில் வந்திருந்த அமிதாப்பச்சன், கிளாப் அடித்து படப்பிடிப்பைத் துவக்கி வைத்தார். கற்பூரம் காட்டப்பட்டதும் பவ்யமாகக் கண்ணில் ஒற்றிக் கொண்டு, குங்குமத்தை வட நாட்டு பாணியில் பெரிய திலகமாக இட்டுக் கொண்டார். தேசிய விருது கிடைத்த மம்முட்டியுடன், அமிதாப், சத்யராஜை நிற்க வைத்து, பூசணிக்காய் திருஷ்டி சுத்திப் போட்ட போது, என்ன இது? என்று ஆர்வத்துடன் கேட்டுத் தெரிந்து கொண்டார் அமிதாப்.

"நாயனம், தவில் வாசிக்கும் இசைக் கலைஞர்களை மையமாக வைத்துப் பின்னப்பட்ட கதை" என்று கலைஞானம் சொன்னதும் தவிலுக்கு வலையப்பட்டியையும், நாதஸ்வரத்துக்கு திருவிழா ஜெய்சங்கரையும் போட்டால் அமர்க்களமாக இருக்கும் என்று ஐடியா தந்தவர் இளையராஜா. படம்: புதுப்பட்டி பொன்னுத்தாயி.

தவில் சக்கரவர்த்தியும், திருவிழாவும் மாஸ்ட்ரோவின் இசையில் வாசிப்பதைப் பெரிய பாக்கியமாகச் சிலாகித்து ஒத்துழைத்ததோடு, விஜயகுமார், நெப்போலியன், ராதிகா போன்றவர்களுக்கு, வாத்தியங்களைக் கையாளும் முறை, முகபாவம், தாளம் போன்ற சில முக்கியமான அடிப்படை விஷயங்களையும் கற்றுத் தந்திருக் கிறார்கள்!

'ஜென்டில் மேன்' சூப்பர் டூப்பர் வெற்றிக்குப் பிறகு, அர்ஜுன் படங்களை வாங்க விநியோகஸ்தர்களிடையே போட்டா போட்டி நடப்பது உண்மைதான். முதன் முதலாக வெளிநபருக்கு அவர் கதை, திரைக்கதை எழுதி, இயக்கியிருக்கும் படம் 'ஜெய்ஹிந்த்.'

"சுதந்திர இந்தியாவைச் சுக்கு நூறாக உடைக்கணும்னு சில தேசத் துரோகிகள் திட்டம் போட்டிருக்காங்க.. அதை முறியடிக்க, அவங்களை ஜெய்ஹிந்த் சொல்ல வைப்பேன்" என்று ஏ.எஸ்.பி. பரத் தன் தாயிடம் சூளுரைப்பதுதான் கதை. இந்தக் கதை, தயாரிப்பாளர் எஸ். செவின்ராஜுக்கு மிகவும் பிடித்துப் போகவே, கிட்டதட்ட மூன்று கோடி ரூபாயைப் பெருமையாகச் செலவு செய்திருக்கிறார். படம் தேசப்பற்றைப் பற்றியதாக இருந்தாலும் "முத்தம் தர எந்த இடம், முகத்திலே நல்ல இடம்?" என்று வைரமுத்து எழுதியிருக்கும் பாடல், இப்போதே ஒரு கலக்கு கலக்கிக் கொண்டிருக்கிறது.

– ஹர்ஷா.



போலீஸ் : பிக்பாக் கெட் அடிச்ச பர்ஸ்ல எவ் வளவு பணம் இருந்துச்சு?

ஆள் : எண்பது ரூபா சார்.

போலீஸ் : ஏன்யா! உமக்கு அறிவிருக்கா? எண்பது ரூபா பிக்பாக் கெட் அடிக்க அதுல 'எல் லாச் செலவும்' போக அவனுக்கு என்னய்யா மிஞ்சும்? எப்படி பிழைக்க முடியும்? இதுக்குப் போய் பெரிசா கம்ப்ளெயின்ட் குடுக்க வந்திட்டீரு!

– ஆ. நல்லமுத்து



"வசனத்துக்கும் பாட் டுக்கும் என்ன வித்தி யாசம்...!"

"கட்டி பையன் ராமு வுக்கு தொடையிலே காயம்.... இது வசனம்! இதுவே அரை அடி கீழே பட்டிருந்தா பாட்டாயிருக் கும்!"

"எப்படி ?"

"கட்டி பையன் ராமு வுக்கு முட்டியிலே காயம்!"

– கார்த்திக் ராஜா

# இந்த அணைக்கட்டுக்கும் ஒரு நிதி நிறுவனத்துக்கும் என்ன சம்பந்தம்?



AKSHAR SF/9499

சக்தி பைனான்ஸ் – வங்கிகளுக்கு
இணையான பாதுகாப்பு



தண்ணீர் விவசாயத்திற்கு அவசியத் தேவை. உரிய நேரத்தில் கிடைக்கும் தண்ணீர் பயிர் செழிக்க வகை செய்கிறது. அப்படிப்பட்ட தண்ணீரைத் தேக்கி வைத்துப் பாதுகாக்கிறது அணைக்கட்டு. அதிலிருந்து தேவைக்கேற்ப நிலங்களுக்குத் தண்ணீர் பெற முடிகிறது. அணை நிறைந்திருக்கும் போது விவசாயிக்கு நிம்மதி. எந்த நேரத்திலும் அணைக்கட்டு துணையிருக்கிறது என்கிற நம்பிக்கை.

சக்தி பைனான்ஸையும் மக்கள் அப்படித்தான் நம்புகிறார்கள். உங்களுடைய சேமிப்புக்கு சக்தி பைனான்ஸ் அதிக பாதுகாப்பு அளிக்கிறது. உங்கள் நலனில் அக்கறை கொண்டு உங்கள் சேமிப்புக்கு நீங்கள் அதிக வருமானம் பெற வகை செய்கிறது. சக்தி பைனான்ஸின் ஸ்திரத் தன்மையைப் பற்றிச் சொல்லவே வேண்டாம்.

சக்தி நிறுவனங்களின் எண்ணிக்கை 20. மொத்த ஆண்டு வர்த்தகம் ரூ. 700 கோடி. 1.5 லட்சம் டெபாசிட்தாரர்கள் மிகுந்த நம்பிக்கையோடு வைத்திருக்கும் டெபாசிட் தொகை ரூ. 150 கோடி. நாடு முழுவதும் 37 கிளைகள். 25 சேமிப்பு மையங்கள். பரவலாகப் பாதுகாப்புப் பெட்டகங்கள்.

சக்தி பைனான்ஸ் ஒவ்வொரு வாடிக்கையாளரின் தேவையையும் பூர்த்தி செய்வதில் தனிப்பட்ட கவனம் செலுத்துகிறது.



அதற்காகவே அவர்களின் தேவைகளைப் புரிந்து கொண்டு பல புதுமையான திட்டங்களை முதன் முதலாக அறிமுகப் படுத்திய சிறப்பையும் பெற்றுள்ளது. அது மட்டுமல்ல. இத்தகைய திட்டங்களைப் பல ஆண்டுகளாகத் தொடர்ந்து அறிமுகப்படுத்தி விரைவாகச் செயல் படுத்துவதிலும் முன்னோடியாகத் திகழ்கிறது.

உங்கள் சேமிப்புகளை சக்தி பைனான்ஸில் டெபாசிட் செய்யுங்கள். நிம்மதி பெறுங்கள்.

**சக்தி**
**பைனான்ஸ் லிமிடெட்**

பதிவு அலுவலகம் :
475 டாக்டர் நஞ்சப்பா சாலை கோயம்புத்தூர். 641018.
தொலைபேசி எண் : 31471/31472/31473/31474.

அமரர் கல்கி

# தியாக பூமி

## 58. பராசக்தி லீலை!

நெடுங்கரை வந்ததிலிருந்து சம்பு சாஸ்திரியார் ஈசனுடைய கருணைத் திறத்தை மேலும் மேலும் உணரும்படி நேரிட்டது. அக்கிரகாரத்து ஜனங்களின் மனோபாவத்தில் ஏற்பட்டிருந்த மாறுதல், அவருக்கு மிகவும் வியப்பை அளித்தது. தீக்ஷிதர் நெடுங்கரைக்கு இன்னும் திரும்பி வரவில்லை. மற்றவர்கள் எல்லாம் சம்பு சாஸ்திரியை இப்போது மிகவும் அன்புடனும் மரியாதையுடனும் வரவேற்றார்கள். சாஸ்திரி புரிந்து வந்த தேசத் தொண்டைப் பற்றி ஏற்கெனவே அவர்களுக்குச் செய்தி எட்டியிருந்தது. அவருக்கு வந்த பெருமையெல்லாம் தங்கள் ஊருக்கு வந்ததாகவே கருதி, அவர்கள் சந்தோஷப்பட்டுக் கொண்டிருந்தார்கள். இப்படிப்பட்ட மகானை ஒரு காலத்தில் ஜாதிப் பிரஷ்டம் செய்து வைத்திருந்தோமே என்பதைக் குறித்து அவர்களில் பலருக்கு வெட்கமாயும் இருந்தது. அதற்குப் பிராயச்சித்தமாக, இப்போது மங்களத்தின் அந்தியக் கிரியைகளை நடத்துவதற்கு அவர்கள் சம்பு சாஸ்திரிக்கு வேண்டிய ஒத்தாசை புரிந்தார்கள். அதுவிஷயமாக அவருக்கு அவர்கள் ஒரு கவலையும் வைக்கவில்லை. அக்கிரகாரத்து ஸ்திரீகளுடைய மனோபாவமும் பெரிதும் மாறிப் போயிருந்தது. வீட்டுக்கு ஒரு நாளாகச் சமையல் செய்து, சாஸ்திரிக்கும் சாருவுக்கும் கொண்டு வந்து வைத்தார்கள். ஒருவரோடொருவர் போட்டியிட்டுக் கொண்டு, குழந்தை சாருவுக்கு வேண்டியதெல்லாம் செய்து வந்தார்கள்.

குடியானத் தெருவையும், சேரியையும் பற்றியோ சொல்ல வேண்டியதில்லை. சாஸ்திரி ஐயா திரும்பி வந்ததைப் பற்றி அவர்களுக்கெல்லாம் ஒரே உற்சாகம். "அந்த அம்மா சாகப் போகிற சமயத்துக்கு வந்துட்டாங்க பாத்தியா? ஐயா கிட்ட தெய்விக சக்தியல்ல இருக்குது?" என்று ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டார்கள்.

இதையெல்லாம் பார்த்த சம்பு சாஸ்திரியார் இனி நெடுங்கரையிலேயே தங்கி விடலாமா என்று யோசித்தார். இதற்கு ஒரே ஓர் எண்ணந்தான் குறுக்கே நின்றது. சாவித்திரியின் க்ஷேமத்தைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவருடைய உள்ளம் துடிதுடித்தது. ஏழு வருஷத்துக்கு முன்னால் நெடுங்கரைக்கு வந்துவிட்டுத் திரும்பிச் சென்றவள் என்ன ஆனாள்? எங்கே போனாள்? சௌக்கியமாய்க் கல்கத்தாவுக்குத் திரும்பிப் போயிருப்பாளோ...?

சாவடிக் குப்பத்துக்குப் போன புதிதில் தாம் அங்கே இருப்பது நெடுங்கரைக்குத் தெரியக் கூடாதென்று சாஸ்திரி எண்ணி னாரல்லவா? ஆகையினால், அந்தச் செய்தி, கல்கத்தாவுக்கும் தெரியக்கூடாது என்று அவர் நினைத்து, சாவித்திரிக்கும் கடிதம் போடவில்லை. ஆனாலும், அவளுடைய க்ஷேமசமாசாரத்தைத் தெரிந்து கொள்ள அவருக்கு ரொம்பவும் ஆவல் இருந்தது. நல்லானைக் கொண்டு கடிதம் எழுதச் சொன்னார். நல்லானுக்குச் சாவித்திரி கட்டாயம் பதில் எழுதுவாளென்று அவர் நினைத்தார். ஆனால் நல்லான் எழுதிய இரண்டு மூன்று கடிதத்துக்கும் கல்கத்தாவிலிருந்து பதில் வரவில்லை. பிறகு, தாமே கடிதம் எழுதினார். அதற்கும் பதில் இல்லை. ஆகவே, ஒரு வேளை ஜாகை மாற்றிக் கொண்டு போயிருப்பார்கள், அதனால்தான் பதில் வரவில்லையென்று தீர்மானித்து, பகவானுடைய அருளால் எப்படியாவது சௌக்கியமாயிருந்தால் சரி என்று எண்ணிக் கொண்டார். நல்லான் முதன் முதலில் உமாராணியைப் பார்த்த போது, "பெரிய குழந்தைதான் நம்மை அடியோடு மறந்துடுத்துங்க" என்று சொன்னதில், தன்னுடைய கடிதங்களுக்குச் சாவித்திரியிடமிருந்து பதில் வராத தாபத்தைத் தான் வெளியிட்டான்.

சாஸ்திரி அதையெல்லாம் இப்போது நினைவுபடுத்திக் கொண்டார். 'ஐயோ! சாவித்திரி! புக்ககத்தில் நீ



சௌக்கியமாயிருக்கிறாய் என்று எண்ணிக் கொண்டிருந்தேனே? உனக்கு இந்த மாதிரி கதி நேர வேண்டுமா? இந்த ஊரிலிருந்து திரும்பி எங்கே போனாயோ? என்னவெல்லாம் கஷ்டப்பட்டாயோ? இப்போது எவ்விடத்தில் என்னமாய் இருக்கிறாயோ? ஒரு வேளை, என்னைப் போல் கடின சித்தர்களும் பாவிகளும் நிறைந்த இந்த உலகில் இருக்கவே வேண்டாமென்று போய்விட்டாயோ?....'

இப்படி எண்ணாத தெல்லாம் எண்ணிச் சம்பு சாஸ்திரி மனம் துடித்தார். எந்தவிதத்திலாவது சாவித்திரியைப் பற்றித் தெரிந்து கொள்ள வேண்டுமென்று அவருக்குத் தாபம் பொங்கிக் கொண்டிருந்தது. ஆகவே, தமக்குத் தெரிந்தவர்களுக்கெல்லாம் கடிதம் எழுதி விசாரிப்பதென்று தீர்மானித்தார். ஒரு நாள் இப்படி அவர் உட்கார்ந்து முதலில் நரசிங்கபுரத்துக்குக் கடிதம் எழுதலாமென்று நினைத்து எழுதிக் கொண்டிருக்கையில், கோர்ட் அமீனா ஒருவன் வந்து, "சாமி!" என்று கூப்பிட்டான்.

சாஸ்திரியார் அவனை உள்ளே வரச் சொல்லி, என்ன விசேஷம் என்று கேட்டார். அமீனா அச்சிட்ட ஒரு கடுதாசியை எடுத்து நீட்டி, "சாட்சி ஸம்மன், சாமி! வாங்கிண்டு கையெழுத்துப் போட்டுக் கொடுங்க" என்றான்.

சாஸ்திரி திகைப்புடன், "சாட்சியாவது, சம்மனாவது? எனக்கு முன்னே பின்னே கோர்ட் வாசனையே தெரியாதே, அப்பா! என்னை யாரு சாட்சிக்குக் கூப்பிடறா?" என்று கேட்டார்.

"ஸம்மனை வாங்கிப் பாருங்களேன், சாமி! தானே தெரியறது. யாரோ உமாராணி என்ற சாவித்திரியோ, சாவித்திரி என்கிற உமாராணியோ, பட்டணத்திலே இருக்காளாமே! அவுக மேலே கேஸாம்!" என்றான்.

சாஸ்திரி திடுக்கிட்டவராய், "என்ன,

என்ன? உமாராணிங்கிற சாவித்திரியா?'' என்று கேட்டார்.

''ஆமாங்க, சாமி! இந்தக் கேஸ் இப்போ ரொம்ப அடிபடுதுங்களே! காலணாப் பாட்டுப் புத்தகங்கூட வந்துடுத்தே? உமாராணி என்கிறது வடக்கத்திப் பொம்பிளை என்றும் சொல்றாங்க; இல்லை, தமிழ் நாட்டுப் பொம்பிளைதான் என்றும் சொல்றாக. ஸ்ரீதரன் என்கிற ஒருத்தர், அந்த உமாராணி தன்னுடைய சம்சாரம், தன்னோடு வந்து இருக்கணும்னு கேஸ் போட்டிருக்காராம். ஸம்மனை வாங்கிப் பாருங்க, தெரியும்!'' என்றான் அமீனா.

சாஸ்திரி நடுங்கிய கைகளுடன் அந்த ஸம்மனை வாங்கிப் பார்த்தார். அதன் தலைப்பில், ''வாதி: ஸ்ரீதரன்; பிரதிவாதி: உமாராணி என்கிற சாவித்திரி'' என்று போட்டிருந்தது. கீழே மேற்படி கேஸில் சாட்சி சொல்வதற்காக, குறிப்பிட்ட தேதியில் சென்னை ஹைகோர்ட்டில் வந்து ஆஜராக வேண்டுமென்றும், இல்லா விட்டால் சிரஸாக்கினைக்கும் அதற்கும் மேலான ஆக்கினைகளுக்குங்கூட உள்ளாக நேரிடுமென்றும் கோர்ட்டு வாசக முறைப்படி எழுதியிருந்தது!

அப்போது அங்கே வந்த சாரு, சாஸ்திரியார் திகைப்புடன் கையிலுள்ள அக்கக் காகிதத்தைப் பார்த்துக் கொண்டிருப்பதைக் கண்டு, ''தாத்தா! என்ன தாத்தா இது?'' என்று கேட்டாள்.

சாஸ்திரி குழந்தையைக்கூட நிமிர்ந்து பார்க்காமல், ''இது என்ன என்கிறது, எனக்கே தெரியலை, அம்மா! பராசக்தியின் லீலை அவ்வளவு விசித்திரமாயிருக்கு!'' என்றார்.

## 59. சந்திப்பு

சம்பு சாஸ்திரி முன் தடவை நெடுங்கரையிலிருந்து கிளம்பிச் சென்றதற்கும், இப்போது கிளம்பியதற்கும் ரொம்பவும் வித்தியாசம் இருந்தது. முன்னே அவர் தன்னந்தனியாகக் கிளம்பிச் சென்றார். ஊரிலுள்ளவர்கள் யாரும் ஏனென்று கேட்கவில்லை. ஆனால் இம்முறை அவர் சாருவுடன் கிளம்பியபோது, கிராம ஜனங்களில் பாதிப் பேர் அவர் பின்னோடு வெகுதூரம் வந்து வழியனுப்பினார்கள். சாஸ்திரிகள், ''நில்லுங்கள், நில்லுங்கள்'' என்று பல தடவை சொல்லியும் அவர்கள் கேட்கவில்லை.

''இனிமேல் நீங்கள் குழந்தையோடே இங்கேயே இருப்பயள், முன்மாதிரி பஜனையெல்லாம் நடத்தலாம்னு இருந்தோம்; அதுக்கு நாங்கள் கொடுத்து வைக்கலை'' என்று முத்துசாமி ஐயர் சொன்னார்.

### அருள்வாக்கு

ஆத்மா இல்லாமல் எந்த இயக்கமும் இல்லை. ஆனாலும் ஆத்மா எதனோடும் நேராக ஸம்பந்தப்படவில்லை. இதைத்தான் மாயை என்பது. எத்தனை யோசித்தாலும் இது புரிபடாது. எதிலும் ஸம்பந்தப்படாவிட்டாலும் ஸம்பந்தப்பட்டாற்போல மாயா விலாஸத்தால் ஆத்மா இருந்து கொண்டுதான் இத்தனை கூத்தையும் நடத்துகிறது!

இதை ஏதோ கொஞ்சம் புரிய வைப்பதற்காக ஓரிரு த்ருஷ்டாந்தம் சொல்வார்கள். அதாவது, ஸூர்யன் இருப்பதால் தான் இத்தனை செடி கொடிகளும், விருக்ஷங்களும் வளர்ந்து கொண்டும், புஷ்பித்துக் கொண்டும், பழுத்துக் கொண்டும் இருப்பது. ஸூர்யன் இல்லா

''அதுக்கென்னடா செய்யறது? நாம் செய்த பாக்கியம் அவ்வளவுதான்'' என்றார் சாமாவய்யர்.

முத்துசாமி அய்யரும் சாமாவய்யரும் இவ்வளவு அன்பு காட்டினார்களென்றால், மற்றவர்களைப் பற்றிச் சொல்லவா வேண்டும்? அதிலும், குடியானவர்களுக்குத்தான் சாஸ்திரி ஐயா போவது ரொம்பவும் மனவருத்தத்தை அளித்தது.

''சாமி, எங்களை மறந்துடாதீங்க!''

''திரும்பிக் கட்டாயம் வந்துடணும்!''

''பட்டிக்காரர் கிட்டே, நாங்க ரொம்ப அவரை விசாரிச்சோம் என்று சொல்லுங்க, சாமி!'' என்று இப்படியெல்லாம் சொல்லிக் கொண்டு குடியானவர்கள் வண்டியைத் தொடர்ந்து வந்தார்கள்.

கடைசியாக, ஊரின் எல்லையைத் தாண்டும் சமயத்தில், சாஸ்திரியார் அவர்களைப் பிடிவாதமாக நிற்கச் சொன்னார். பிற்பாடு, வண்டி துரிதமாகச் சென்றது.

வண்டி போய்க் கொண்டிருக்கையில், சாரு, ''நான் போன ஜன்மத்திலே ரொம்பப் பாவம் பண்ணியிருப்பேன் போலிருக்கு, தாத்தா! இத்தனை நாளைக்கப்புறம், என்னை இடுப்பிலே எடுத்துக்கறதற்கு ஒரு பாட்டி கிடைச்சான்னு நினைச்சுண்டிருந்தேன், அவளையும் ஸ்வாமி அழைச்சுண்டுட்டாரே!'' என்றாள்.

''உன் வாக்குப் பலிக்கட்டும், சாரு! ஸ்வாமி மங்களத்தினுடைய பாவத்தையெல்லாம் மன்னித்துத் தன் கிட்ட அழைச்சுக்கட்டும்'' என்றார் சாஸ்திரி.

''என்ன தாத்தா, பாட்டியும் அப்படியே சொன்னா; நீங்களும் அப்படியே சொல்றேளே? பாட்டி என்ன பாவம் பண்ணினா?'' என்று சாரு கேட்டாள்.

இதையெல்லாம் எப்படிக் குழந்தை

விட்டால் இது எதுவுமே நடக்காது. அதற்காக, ஸூர்யனேதான் திட்டம் போட்டு இவற்றை எல்லாம் உண்டாக்கி நடத்துவதாகச் சொல்ல முடியுமா?



வெளிச்சம் இல்லாமல் ஒரே இருட்டா யிருந்தால் எந்தக் கார்யமும் செய்ய முடிவதில்லை. விளக்கு ஏற்றி வைக்கிறோம். அதன் வெளிச்சத்தில் ஒருத்தன் புராணம் படிக்கிறான். இன்னொருத்தன் ஏதோ மனலைக் கெடுக்கும் நாவல் படிக்கிறான். வெளிச்சத்தின் துணையினால் பல பேர் பலவிதமான நல்லதும் கெட்டதுமான கார்யங்களைச் செய்கிறார்கள். அதனால் இத்தனைக்கும் விளக்கு தான் ஜவாப்தாரி என்று சொல்வதா? ஆனாலும் அந்த தீபம் இல்லா விட்டால் இந்தக் கார்யம் எதுவும் நடக்க முடியாது. இப்படித்தான் ஆத்மாவின் நேர் தூண்டுதல் அல்லது கர்த்ருத்வம் இல்லாமலே அதன் ஸாந்நித்ய விசேஷத் தால் மட்டும் மனஸ் வேலை செய்வதும், சரீரத்தை வேலை வாங்குவதும் என்று உபமானம் சொல்கிறார்கள்.

– ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

யிடம் சொல்வது என்று சாஸ்திரி தவித்தார். பிறகு ஒருவாறு சமாளித்துக் கொண்டு சொன்னார் : "ரொம்ப நாளைக்கு முன்னாலே உன்னைப் போல் ஒரு குழந்தை எனக்கு இருந்தா, அவ பேர் சாவித்திரின்னு சொன்னேனோ, இல்லையோ? அந்தக் குழந்தையைப் பாட்டி ரொம்பக் கஷ்டப் படுத்திண்டிருந்தா. அது அவள் மனத்திலே உறுத்திண்டே இருந்திருக்கு. அதனாலே தான் ஸ்வாமி என்னை மன்னிப்பரான்னு கேட்டுண்டே இருந்தா. சாகிற சமயத்திலே உன்னைப் பார்த்ததும், சாவித்திரி குழந்தையா யிருந்தது மாதிரி அவளுக்குத் தோணித்துப் போயிருக்கு. அதனாலேதான், தன் மேலே கோபமில்லைன்னு உன்னைச் சொல்லச் சொன்னாள்...."

இப்படிச் சிரமத்துடன் கூறிவந்த சாஸ்திரி சட்டென்று நிறுத்தினார். அவர் மனத்தில் பளிரென்று ஓர் எண்ணம் உதய மாயிற்று. சாருவை உற்றுப் பார்த்தார். அப் படியும் இருக்குமா? அப்பேர்ப்பட்ட அதி சயம் நடக்கக் கூடியதா?....

"தாத்தா! என்ன யோசிக்கிறேள்?" என்று சாரு கேட்டாள்.

"ஒன்றுமில்லை, அம்மா! கெட்டுப் போன பெண் எனக்குக் கிடைத்தாள். உனக்கும் அம்மா கிடைக்கக் கூடாதா என்று யோசிக்கிறேன்" என்றார்.

"எனக்கு அம்மாதான் பராசக்தின்னு நீ சொல்லியிருக்கயே?" என்றாள் சாரு.

"பராசக்தி நம் எல்லாருக்கும் அம்மா, குழந்தை! ஆனால் பூலோகத்து அம்மா வேணும்னு நீ ஒரு நாளைக்கு அம்பாளை வேண்டிண்டயே? அந்தப்படி பூலோகத்து அம்மாவே உனக்குக் கிடைச்சா நல்லது தானே?"

"என்னமோ, நீ சொல்றது எனக்கு ஒண்ணுமே புரியலை தாத்தா!" என்றாள் குழந்தை.

மறுநாள் சென்னை 'வஸந்த விஹார'த்தில் சம்பு சாஸ்திரியும் உமா ராணியும் சந்தித்தபோது நடந்த சம்பா ஷணையும் குழந்தைக்கு நன்றாய்ப் புரிய வில்லை.

முன்பெல்லாம், "சாஸ்திரிகளே! வாருங்கோ!" என்று சொல்லி அவரை வர வேற்ற உமாராணி, இன்று அவரைக் கண்ட தும் ஓடிவந்து அவர் காலில் விழுந்தாள்.

அவளைத் தூக்கி எடுத்தபடி சாஸ்திரி, "இப்படி என்னை ஏமாற்றினையே? நியா யமா, சாவித்திரி?" என்று கேட்டார்.

சாவித்திரி விம்மலுடன், "என் பேரில் தப்புத்தான், அப்பா! ஒவ்வொரு நிமிஷமும் உங்கள் காலிலே விழுந்து நான்தான் சாவித்திரி என்று சொல்லணுமென்று என் மனசு துடித்துக் கொண்டிருந்தது. நீங்கள் என்ன நினைக்கக்குவேளோ என்ன மோன்னு தயங்கித் தயங்கிண்டு இருந்துட் டேன்" என்றாள். பிறகு அப்பாவை நிமிர்ந்து பார்த்து, "நான்தான் பைத்தியக் காரி, சொல்லலை; உங்கள் பொண்ணை உங்களுக்கு எப்படி அப்பா அடையாளம் தெரியாமல் போச்சு?" என்று கேட்டாள்.

"மனத்துக்குள்ளே ஏதோ சொல்லிக் கொண்டிருந்தது; பாசம் இழுத்துக் கொண்டுதான் இருந்தது. ஆனால், பராசக்தி யின் மாயையைப் போல் உன் மாயையும் என்னை மயக்கி விட்டது" என்றார் சாஸ்திரி.

மறுபடியும் சாவித்திரி, "நான் உங்களை ஏமாற்றினேன் என்று சொல்கிறீர் களே, அப்பா! நீங்கள் மட்டும் என்னை ஏமாற்றிச் சாருவை ராத்திரிக்கு ராத்திரியே அழைச்சுண்டு போய்விடவில்லையா? எப்படி அப்பா உங்களுக்கு மனசு வந்தது?" என்று கேட்டாள்.

இந்தச் சமயத்தில் சாரு சோகமான குரலில், ''தாத்தாவுக்குப் பொண் கிடைச்சுட்டா, மாமிக்கு அப்பா கிடைச்சுட்டா! நான்தான் அநாதையாய்ப் போய்ட்டேன்'' என்றாள்.

சாவித்திரி அவளைக் கட்டிக் தழுவிக் கொண்டு, ''என் கண்ணே! நீ அநாதையாய்ப் போகவில்லை. தாத்தாவுக்குப் பொண்ணும், மாமிக்கு அப்பாவும் கிடைச்சா என்ன? உனக்கு யார் வேணும், சொல்லு. நான் கிடைக்கப் பண்றேன்'' என்றாள்.

சாரு பேசாமல் நிற்கவும், ''ஆனால் உனக்கு நன்றாய் வேணும்! நீ துஷ்டப் பொண்! எங்கிட்டச் சொல்லிக்காமே ராத்திரிலே எழுந்து தாத்தா கிட்ட ஓடிப் போனயோல்லியோ? உன் தாத்தா என் அப்பாவாய்ப் போய்விட்டாரே? இப்ப என்ன பண்ணுவே!'' என்று சாவித்திரி பரிகசிக்கும் குரலில் கேட்டாள்.

இந்தக் கேள்வி குழந்தையின் மனத்தை எவ்வளவு தூரம் புண்படுத்தியதென்பதைச் சாவித்திரி தெரிந்து கொள்ளவில்லை. தாய், தகப்பனாரின் அன்பை அநுபவிக்கக் கொடுத்து வைக்காத அந்தக் குழந்தை, தாத்தாவின் பேரிலேயே தன்னுடைய முழு அன்பையும் சொரிந்திருந்தாள். தாத்தா தனக்கே முழுக்க முழுக்கச் சொந்தம் என்றும் நம்பியிருந்தாள். அப்படியில்லை, தாத்தாவின் மேல் இந்த மாமிக்குத் தன்னைவிட அதிக பாத்தியதை உண்டு என்று ஒருவாறு அவளுக்கு இப்போது புலப்பட்டதும் துக்கம் பொத்துக் கொண்டு வந்தது. சாவித்திரியினுடைய ஆலிங்கனத்திலிருந்து விடுவித்துக் கொண்டு குழந்தை வெளியே சென்றாள்.

மேற்சொன்ன சம்பவத்தின் போது, சாவித்திரியையும் சாருவையும் சம்பு சாஸ்திரி மாறி மாறிப் பார்த்துக் கொண்டிருந்தார். இரண்டு பேருடைய முகத்தையும் ஒப்பிட்டுப் பார்த்தார். குழந்தை வெளியில் போனதும், ''சாவித்திரி! என்னைத்தான் ஏமாற்றினாய்! அந்தக் குழந்தையை ஏன் ஏமாற்றுகிறாய்?'' என்று கேட்டார்.

சாவித்திரியை அந்தக் கேள்வி திடுக்கிடச் செய்தது என்பதற்கு அவளுடைய கண்களில் ஒரு க்ஷண நேரம் உண்டான திகைப்பு அறிகுறியாயிருந்தது. அடுத்த க்ஷணத்தில் திகைப்பு மாறிவிட்டது.

''என்ன அப்பா சொல்கிறீர்கள்? குழந்தையை நான் ஏமாற்றுகிறேனா? எதற்கு? எனக்கு ஒன்றும் புரியவில்லையே?'' என்றாள்.

''புரியவில்லையா? இந்தக் குழந்தைக்கு அம்மா யார், சாவித்திரி! உனக்குத் தெரியாதா?'' என்று கேட்டார்.

''இந்தக் குழந்தைக்கு அம்மாவா? எனக்கு எப்படித் தெரியும்?'' என்றாள் சாவித்திரி.

சாஸ்திரி சற்று நேரம் சும்மா இருந்தார். பிறகு, ''குழந்தை! உனக்குச் சொல்ல இஷ்டமில்லாவிட்டால் வேண்டாம். ஏழு வருஷத்துக்கு முன்னாலே நெடுங்கரைக்கு நீ தனியா வந்துட்டுப் போனதெல்லாம் இப்பதான் அம்மா எனக்குத் தெரிஞ்சது. அப்புறம் நீ என்ன செய்தே, எங்கே போனே, குழந்தை எங்கே பிறந்தது, யார் உனக்கு ஒத்தாசை பண்ணினா, இத்தனை நாளா எங்கே இருந்தே - இதையெல்லாம் தெரிஞ்சுக்கணும்னு என் மனசு துடியாய்த் துடிக்கிறது, சாவித்திரி!'' என்றார்.

''அப்பா! இதெல்லாம் இப்ப என்னைக் கேக்காதேங்கோ, அப்பா! கொஞ்சம் பொறுத்துக்குங்கோ. இந்தக் கேஸ் முடியட்டும், அப்புறம் எல்லாம் சொல்றேன்'' என்றாள் சாவித்திரி.

பிறகு சாஸ்திரி, சாவித்திரி புக்ககத்திலிருந்து தமக்கு எழுதிய கடிதத்தையெல்லாம் மங்களமும் அவள் தாயாரும் சேர்ந்து தம்மிடம் காட்டாமல் மறைத்த விஷயத்தைச் சொன்னார். மங்களம் இறந்து போன செய்தியையும், அந்திம காலத்தில் அவள், ''ஸ்வாமி என்னை மன்னிப்பாரா?'' என்று அடிக்கடி புலம்பியதையும், சாருவைப் பார்த்து, ''சாவித்திரி! என்மேலே உனக்குக் கோபமா?'' என்று கேட்டதையும் பற்றிச் சொன்னார். இதையெல்லாம் கேட்கக் கேட்கச் சாவித்திரிக்குக் கண்ணில் ஜலம் ததும்பிற்று.

''ஐயோ! என் சித்தியை ஒரு தடவையாவது பார்க்காமல் போய்விட்டேனே?'' என்று உள்ள உருக்கத்துடன் கூறினாள்.

அச் சமயத்தில், சாரு நாய்க் குட்டியை எடுத்துக் கொண்டு மறுபடியும் அந்த அறைக்குள் வந்தாள். ''தாத்தாவுக்குப் பொண் கிடைச்சா, மாமிக்கு அப்பா கிடைச்சா, எனக்கு ஜில்லி கிடைச்சது'' என்றாள் குழந்தை.

(தொடரும்)



''படத்தோட பேரைக் கேட்டவுடனேயே தியேட்டர் வாசலில் டிக்கெட்டுக்காகப் பெரிய க்யூ நிக்கற மாதிரி ஒரு டைட்டில் சொல்லேன்!''

''பாமாயில்!''

– என்.கே. பாலசுப்பிரமணியன்

# உயர் வரிசைகளிலே!

## பாம்பே டையிங் பள்ளிச்
## சீருடைத்துணிகள் அவர்களது எதிர்காலம்
## போலவே ஒளிமிகுந்தவை.

ஒயிலான உமது சின்னஞ்சிறு ''நிபுணர்களுக்கு'' மிகச்சிறந்ததே
தேவை. எனவே, முன்னைவிடச்சிறந்த பள்ளிச்சீருடைத்
துணிவகைகளைத் தருகிறது பாம்பே டையிங்.

- பாலியெஸ்டர் ப்லெண்டெட் - சுருக்கம் விழாது. குறைந்த பட்ச இஸ்திரியே போதும்.
- நீடிப்பவை - நீடித்துழைக்கும், நிறம் மங்காது
- கடுமையான திணைத்திற்கு மென்மையாக, வசதியாக இருக்கும்.
- எளிதில் துவைக்கலாம்.

**உங்களுக்குத் தேவையான அதே**
**நிறத்தில் கிடைக்கும்**





பாம்பே டையிங் பள்ளிச் சீருடை
அணிவரிசைக்கு உட்பட்டவை :

**துணிகள்**

தூய பருத்தி மற்றும் பாலியெஸ்டர்
ப்லெண்டுகளில்
சூட்டிங்ஸ் மற்றும் ஷர்ட்டிங்ஸ்

**ரெடிமேட்கள்**

ரெடிமேட் பள்ளிச் சீருடை ஷர்ட்ஸ் மற்றும்
டிரௌஸர்ஸ். டைஸ், ஸாக்ஸ் மற்றும்
பள்ளி பைகள்

**பாம்பே டையிங்**
ஸ்தாபிதம் 1879

SEASONS/BD/114/TAM

# அம்மா வருகிறாள்...

குழந்தை ஸ்ரீராமை தோளில் தட்டியவாறு வாசலுக்கு வந்த என்னை ஆச்சரியத்தில் ஆழ்த்தியது அம்மாதான்.

திரும்பித் திரும்பிப் பார்த்தவாறு, முகத்தில் கொஞ்சம் பயத்துடன் என் மேல் மோதாக் குறையாய் வந்து அருகில் நின்றாள்.

''வாங்கம்மா...என்னாச்சு...ஏன் இந்த அவசரம்...அப்பா, தங்கைகள் எல்லாம் சௌக்கியம்தானே...'' என்றேன் நான்.

''நான் இங்க வந்ததை யாராவும் பாத்துடப் போறாங்கன்னு பயமா இருக்கு... உள்ள வாடா வாக...நிதானமாப் பேசுவோம்...'' என்றாள் அம்மா தீர்மானமாய்.

எனக்குள் கொஞ்சம் உதறல்.

'என்ன பிரச்னையோ... அதுவும் அம்மா வந்தால் பணப்பிரச்னைதான்... இரண்டு தடவை கடன் வாங்கிக் கொடுத்தாயிற்று... மீண்டும்... என்னவோ.. மனத்துக்குள் கொஞ்சம் பயத்துடன் அம்மாவின் பின் சென்றேன்.

அம்மா சற்றே இளைத்திருந்தாள். இந்த ஒரு வருடப் பிரிவில் அம்மாவிடம் நிறைய மாற்றம். தலையில் நிறைய வெள்ளிமுடி. முகத்தில் சோகை கட்டியிருந்தது.

உள்ளே இருந்து கவிலா வந்தாள்.

''வாங்க அத்தை...'' என்றாள் வலுக் கட்டாயச் சிரிப்புடன்.

''சௌக்கியமாடிம்மா...குழந்தையை வெச்சுட்டு... எல்லா வேலையும் பாத்துட்டு...த்சொ...த்சொ... ஏன் புருஷனும், பொண்டாட்டியும் சம்பாதிக்கிறீங்க...ஒரு வேலையாள் போட்டுக்கக் கூடாது... என்னடா வாக..பாவம்டா அவ...'' என்ற அம்மா, கவிலா கைப்பாத்திரத்தைப் பிடுங்கிக் கழுவினாள்.

கவிலா விநோதமாய்ப் பார்த்தாள் என்னை.

நான் ஸ்ரீராமைத் தூளியில் விட்டேன்.

''கவிலா...நான் மார்க்கெட் போயிட்டு வந்துடறேன். நீ அம்மாவோட பேசிட்டு இரு... ''சட்டையை மாட்டிக் கொண்டு கிளம்பினேன்.

ஏனோ அம்மாவைத் தவிர்க்கிறேனோ என்ற உணர்வு மனசைச் சுட ஒரு நிமிடம் உடம்பில் வெப்பக் காற்று பரவி மறைந்தது.

கவிலா என்னைத் தவிர யாரிடமும் அவ்வளவாய்ப் பேச மாட்டாள். என்னை மட்டும் பிடிக்கும்; இப்பொழுது கூடவே ஸ்ரீராம். அம்மா என்றால் நாலாம் பட்சம்.



# திருமாமகள்

இரண்டு வருடத்திற்கு முன்னே மெது வாய்ச் சண்டையை ஆரம்பித்துக் கடைசியில் தனியாய்க் குடித்தனம் வைத்தும் விட்டாள்.

''இங்க பாருங்க...நம்ம ஜெனரேஷன் வேற...உங்க அம்மாக்கு ஏதும் புரியாது.. மாசம் ஐநூறு குடுத்துடுங்க...விட்டது தொல்லை...''

அப்பா கேட்டுக் கொண்டே வந்து விட்டார்.

''வெளில போடா நாயே...ஒத்த புத்திக்காரன் நீ. பொண்டாட்டி தான் பெரிக... உனக்கு. கேட்டுட்டே மரமாட்டம் நிக்கறான் பாரு...'' அப்பா கத்தினார்.

கவிதா சொன்னதில் கோபம் வரவில்லை. மாறாக அப்பா திட்டியதில் நிறைய ரோசம் வர, அன்று சாயந்திரமே வீடு பார்த்து, வந்து ஒரு வருடமும் ஆகி விட்டது. அப்பா வந்து எட்டியே பார்க்கவில்லை. குழந்தையை அழைத்துக் கொண்டு நாங்கள்தான் போனோம்.

ரூமை விட்டு அப்பா வெளியில் வரவே இல்லை.

அம்மாதான் பதறினாள். என் மனைவி கவி என்னைப் பார்த்த இகழ்ச்சிப் பார்வையில் மத்தளமாய் அடிபட்டு, அடுத்த நாளே கிளம்பி வந்ததுதான். பிறகு அம்மா இரண்டு முறை வந்துவிட்டு, குடும்பப் பாட்டைப் பாடிவிட்டுப் பணம் வாங்கிச் சென்றவள், இதோ மூன்றாம் முறையாய் வந்திருக்கிறாள்.

மார்க்கெட்டில் காய்கறி வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்தேன். அம்மா ஸ்ரீராமை குளித்து விட்டுக் கொண்டிருக்






தான்.

"என்னங்க இன்னிக்கு ஆபீஸ்ல ஆடிட்...நான் போகணுமே...நீங்க வேணா லீவு போட்டுக்குங்க..." என்றாள்.

அவள் அம்மாவைத் தவிர்ப்பது தெரிந்தது.

"நீ போ சுசி...ஸ்ரீராமை நான் பார்த்துக்கறேன்... சமத்தா இருப்பானே என்கிட்ட...." என்றாள் குழந்தையாய்.

"இல்ல அத்தை...எங்க அம்மாட்ட தான் எப்பவும் விடுவேன்... திடீர்னு அழுதா... நீங்க... எப்படி... சமாளிப்பீங்க..." என்றாள் தலையை வாரிக் கொண்டே.

"என்னடாது வாசு... நீ சொல்லக் கூடாதா... சாயங்காலம் நான் கிளம்பிடுவேன்... உங்க அப்பா டூர் போயிருக்கார்...சத்தம் போடாம வந்தேன்... நீ இரேண்டா... குழந்தையை ஆசை தீரக் கொஞ்சிட்டுப் போறேன்..." என்றாள் அம்மா.

"சரிங்க...பாவம்...அத்தைட்ட இருக்கட்டும்...நீங்க என்னைக் கொண்டு விடுங்க... அத்தை நான் வரேன்...மசிச்ச சாதம் போட்டுடுங்க...ஹாட் வாட்டர் பிளாஸ்க்ல இருக்கு.... நான் வரேன்..." கிளம்பினாள் சுசீலா.

வழிநெடுகத் தொணதொணத்தாள்.

"இங்க பாருங்க...காசு பணம் கேட்டா... கடன் இருக்குன்னு சொல்லுங்க... ப்ரிட்ஜ் ஆர்டர் செஞ்சிருக்கு... நாமும் ஏதானும் சௌகரியம் செஞ்சுக்கணும்...புரிஞ்சுதா..." என்றாள்.

இறங்கிக் கொண்டாள்.

மௌனமாய்த் தலையாட்டினேன்.

"என்னம்மா... சமத்தா இருக்கானா..." என்றேன் கொஞ்சம் சிரிப்புடன்.

"ஏன்டா வாசு...உன் மூஞ்சில சிரிப்பே போயிடுத்து...சிரிச்ச முகத்தோட தானே இருப்பே... பாவம் உனக்கு என்ன பிரச்னையோ... சரி, குளிச்சிட்டு வா... சாப்பாடு போடறேன்..." என்றாள் அம்மா

● ஆழமான நீண்ட வெட்டுக் காயம் பட்டுவிட்டால் டாக்டர் தையல் போடுகிறார். மருந்துவைத்துக் கட்டுகிறார். சங்க காலத்தில் போர்கள் அடிக்கடி நடந்தன. வெட்டுப்பட்ட வீரர்களுக்கு அக்கால மருத்துவர்கள் சிகிச்சை அளித்தார்கள். ஒரு வீரன் அடிபட்டுக் கிடக்கிறான். சிரல் பறவையின் வாய் அலகைப் போன்ற நெடு வெள்ளூசியால் மருத்துவர் அவன் உடலில் தையல்களைப் போட்டார் என்ற குறிப்பு 'பதிற்றுப் பத்தில்' வருகிறது. மருத்துவத்திலும் நாம் முன்னோடியாக இருந்திருக்கிறோம்.

– அ.க. கிருஷ்ணன்

# பரிசு ரூ.250

## ஜோக்கை பூர்த்தி செய்யுங்கள்!

'இடுக்கண் வருங்கால் நகுக' என்றார் வள்ளுவர். அதனால்தான் இந்த அட்மிஷன் தொடர்பான ஜோக் எழுதும் போட்டி வைத்திருக்கிறோம். கீழே அட்மிஷன் தொடர்பான ஒரு ஜோக் எழுதி, அதை முடிக்காமல் பாதியிலேயே விட்டிருக்கிறோம். நாங்கள் முடிக்காமல் விட்ட அந்த இடத்தை உங்கள் கற்பனைத் திறனைக் கொண்டு நீங்கள் எழுதி முடித்து, கூப்பனைப் பூர்த்தி செய்து 18.5.94 க்கு முன் எங்களுக்குக் கிடைக்கும்படி அனுப்புங்கள். உறை மீது 'அட்மிஷன் ஜோக்' என்று அவசியம் குறிப்பிட வேண்டும். மிகச் சிறப்பான முறையில் ஜோக்கை முழுமையாக்கி அனுப்புபவருக்குப் பரிசு ரூ. 250/-. பிரசுரமாகும் பிறவற்றுக்கும் சன்மானம் உண்டு. ஆசிரியர் தீர்ப்பே முடிவானது.



"நேத்து வரைக்கும் நல்ல மனுஷனா இருந்தவர், கல்யாணம் ஆனதும் லஞ்சம் வாங்க ஆரம்பிச்சுட்டாருப்பா!"

"ஆமா, பெண்டாட்டியை சந்தோஷமா வெச்சுக்கணுமில்ல?"

"அதுக்கில்லப்பா..... --------
------------------------------------
------------------------------------
------------------------------------
------------------------------------"

என் பெயர் : ....................................

விலாசம் : ....................................

....................................

....................................

சகஜமாய்.

"இதோம்மா... நீ காபி சாப்பிடேன் இன்னொரு தரம்..." என்றேன்.

சுசீலாவிற்கு என் அம்மாவை மட்டும் உபசாரம் பண்ணத் தெரியாது. அதான் நான் கேட்டேன்.

"சார்..." வாசலில் குரல் கேட்க... "யார்?" என்றேன்.

"இந்த வீட்டுக்குத்தானே ப்ரிட்ஜ்... பதினஞ்சு டோர் நம்பர்..."

"ஆமாம்...." என்றேன்.

அதற்குள் அம்மாவே வந்துவிட்டாள்.

"அட... ப்ரிட்ஜா... சமத்துடா.. அப்படித்தான் வாங்கிச் சேர்க்கணும்... இரு... இரு.. நல்ல நேரம் பார்த்து உள்ள கொண்டு வரேன்..." என்றாள் அம்மா.

அம்மாவே மஞ்சள், குங்குமம் இட்டாள்.

பார்த்துப் பார்த்து மகிழ்ந்தாள்.

"ஏண்டா...விலை என்னடா?" என்றாள் அம்மா.

"ஏழாயிரம் ஆச்சம்மா... நொய் நொய்ன்னு... ஒரே பிடுங்கல்மா உன் மருமகள்... அதான் லோன் போட்டேன்..." என்றேன் மனசாரப் பொய்யுடன்.

"ச்சொ...ச்சொ...பொறுப்பில்லாம ஏன் கடன் வாங்கறடா...சரி...சரி...சாப்பிட வா..." என்றாள்.

மணி சரியாய்ச் சாயந்திரம் ஆறு அடித்தது கடிகாரத்தில். சுசீலா உள்ளே நுழைந்தாள்.

"ஏங்க...என்னவாம் உங்கம்மாக்கு. ஏதானும் சொன்னாங்களா?" என்றாள் முகம் கழுவியவாறு, படபடத்த குரலுடன்.

"இல்லையே சுசீ...நீ ஏதும் கேட்காதே..." என்றேன் அவசரமாய்.

"என்னடா..சுசீ வந்தாச்சா... சுசீ.. சாயந்திரம் கிளம்பணும்..." என்றாள் அம்மா.

"வேறென்னமா விசேஷம்...ஊர்ல?" என்றேன்.

"ஒண்ணுமில்லடா... குழந்தையைத் தூளிலேந்து எடுத்துண்டு வா..." என்றாள்.

"ஏம்மா?" என்றேன்.

"அப்பாவோட நிலக் கேஸ் ஜெயிச்சுது... எல்லாருக்கும் பத்தாயிரம் குடுத்தார். உன் மேல கோபம்... நான் தான் சண்டை போட்டு வாங்கி, எனக்குக் குடுத்த இரண்டாயிரத்தையும் சேர்த்து... குழந்தைக்கு தங்கத் தண்டை வாங்கினேன். மூத்த வாரிசு பாரு..." சொன்னவள் சுருட்டி வைத்திருந்த சுருக்குப் பையிலிருந்து தண்டையை எடுத்துக் குழந்தையின் காலில் பூட்டினாள்.

"ராஜா..."- உச்சி மோந்தாள்.

நான் கூனிக்குறுகி நின்றேன்.

"அத்தை காப்பி தரட்டுமா?" என்றாள் சுசீலா.

# வெயிலை மறக்கச் செய்த 'ஜில்' ஸ்பெஷல்!

◆ அட்டைப்படத்தின் 'ஜில்' குளியலே கடும் வெயிலை மறக்கச் செய்து விட்டது!
பம்மல், வி.சீனிவாச வரதன், ஆர்.சித்ரா, வி.ச.வத்சலா.

◆ அட்டைப் படம் ஐஸ் க்ரீமை விட ஜில்லென்று இருந்தது! இதோ ஒரு குளிர்பானப் பாராட்டு!
ஏத்தாப்பூர், செவேகா.

◆ தற்காலக் குழந்தைகளின் கட்டித் தனத்தையும், எதையும் விரைவில் புரிந்து கொள்ளும் ஆற்றலையும் வெளிப்படுத்தின்று ரிஷபனின் 'போதி' சிறுகதை.
மதுரை - 20, சி.மகேஷ்.

◆ திராவிட இயக்கப் பரிணாம வளர்ச்சி பற்றிப் பக்கம் பக்கமாக விவரித்தாலும் கூறமுடியாத விஷயத்தைக் கால் பக்க கார்ட்டூன் மூலம் நெற்றியடியாகச் சொல்லி விட்ட விதம் அருமையிலும் அருமை!
அரவக்குறிச்சிப்பட்டி, எம்..அசோக்ராஜா.

◆ 'ஜெயலலிதாவுக்கு ஸ்பெஷல் பாராட்டு!' தலையங்கம் தங்களின் ஆழமான சிந்தனையைக் காட்டுகிறது.
சென்னை - 54, க.நடராசன்.

◆ மனித சக்திகளை ஓரம் கட்டி விட்டு, ரோபோக்களையும், கம்ப்யூட்டர்களையும் இனி நம்பலாம் என்று பல தொழில் நிறுவனங்கள் நினைக்க ஆரம்பித்திருக்கின்ற நேரத்தில், ஜனத்தொகைப் பெருக்கத்தின் காரணமாக வேலையில்லாத் திண்டாட்டத்தில் மூழ்கித் தவித்துக் கொண்டிருக்கும் இந்தியாவுக்கு, மனித சக்தியை நம்பும் மார்க்கம் ஒன்றே உகந்தது என்பதையும், அதைச் செயல்படுத்தும் வழி முறையையும் உதாரணத்தோடு எடுத்துக் கூறிய தலையங்கம், சரியான நேரத்தில் எழுதப்பட்ட ஒன்று. கல்கியின் கருத்துக்கள்




## வட்டமேஜை

ம.மோ.சிங்கின் காதுகளுக்கு எட்டினால் நிச்சயமாகச் சிந்திப்பார். 'ஜெ' விஷயம் வேறு!
இராஜாக்கமங்கலம், கே.மணிகண்டன்.

◆ பதினாறு வயதில் எழுதிய ஒரு காதல் கதை 93வது வயதில் சாகித்ய அகாதமி விருதைப் பெற்றுத் தந்தது என்றதுக்கு ஆழ்வார் அவர்களைப் பற்றிய செய்தி, ஒரு பக்கம் வியப்பாகவும் மறுபக்கம் வேதனையாகவும் இருந்தது.
கும்பகோணம், பவானி கிருஷ்ணா.

◆ 'மலை மறைந்தது' என்னும் தலைப்பில் வெளியான முதல் பக்கக் கட்டுரையில் அமரர் எஸ்.ஏ.பி. அண்ணாமலையின் அரிய குணநலன்களைத் தாங்கள் நினைவு கூர்ந்தது எங்கள் மனத்தில் என்றும் நிலைத்திருக்கும்.
திருச்சி - 5, தமிழ்தாசன்.

◆ எண்ணெய்க் குளியல், நீராகாரம் இவற்றினால் உடலுக்குக் குளிர்ச்சி உண்டா? என்ற என் நீண்ட கால சந்தேகம் நிறைவேறப் போகிறது என நினைத்து, டாக்டர்களின் பதில்களைப் படிக்கத் தொடங்கினால், அவற்றிலும் கருத்து வேறுபாடுகளா!
திருவெண்ணெய்நல்லூர், வைத்யா.

◆ போட்டோகிராபர் ஷிராகாவின் சாதனை மகத்தானது. பனி அடுக்குகளில் ''பென்குவின் ராஜ்ஜியம்'' கண்ணைக் கவர்ந்தது.
ஒட்டன் சத்திரம், ரா.ரவி.

◆ 'வாத்து' சிறுகதை அபாரம். எளிமையான நடை. முடிவு, எதிர்பாராத திருப்புமுனை.
திருவாரூர், அமுதா தமிழ்நாடன்.

◆ குளிர்பானங்களுக்கு நிகரான ஒப்பற்ற தயாரிப்பு, 'ஜில்' ஸ்பெஷல்.
திருச்சி - 8, மா.நளினி.

◆ வை. கோ. வின் எழுச்சிப் பேரணி பற்றிய கட்டுரையில், 'பத்திரிகையாளர்களின் பேட்ஜ் பின்புறம் சேவல் சின்னம் இருந்தது' என்று முடித்திருக்கிறீர்கள். அந்தவறு பேட்ஜ் தயாரித்த நிறுவனத்தினுடையது. பேனைப் பெருமாளாக்குகிற நிலையில், அதை வைத்துப் பணம் எங்கிருந்து வந்திருக்கும் என்று வினவியிருக்கிறீர்கள். நியாயமா இது? அங்கங்கே, தொண்டர்கள் தங்கள் குருதி சிந்த உழைத்துச் சேகரித்த கட்சி நிதியில்தான் பேரணிச் செலவுகள்! கட்சியின் வரவு செலவுப் புத்தகம் பார்க்கத் தயாரா?
பிச்சப்பாக்கம், கோமல் தமிழமுதன்.



# சக்கரவர்த்தித் திருமகன்

ஒருவர் பின் ஒருவராக எழுந்து ராவணனைத் திருப்தி செய்ய வீரம் பேசினார்கள். எல்லாரும் கூட்டமாக எழுந்து ஆயுதங்களைத் தூக்கி கர்ஜித்தார்கள்.

எல்லாரையும் உட்காரச் சொல்லி ராவணனுடைய தம்பி விபீஷணன் எழுந்து கைகூப்பிப் பேசலானான் :

''அண்ணா! இவர்கள் சொல்லும் யோசனை காதுக்கு இனிமையாக இருந்தாலும், சரியானதல்ல. உமக்கு நன்மை தராது. நீதி சாஸ்திரத்திற்கு விரோதமாக ஒரு காரியம் செய்தால் அதனால் நஷ்டம் நேரிடும். சாம தான பேத உபாயங்களைப் பிரயோகிக்க முடியுமா என்று முதலில் பார்த்து, அவை முடியாவிட்டாலேதான் தண்டோபாயத்தைப் பகைவன் பேரில் எடுத்துக் கொள்ள வேண்டும். இவர்கள் சொல்லுவது போல் உடனே யுத்தம் ஆரம்பித்து விட்டால் லங்கை நாசமாகும். நாமும் அழிந்து போவோம்.

''தருமத்தையும் யோசிக்க வேண்டும். ராமனுடைய மனைவியைத் தாங்கள் எடுத்து வந்தது கொஞ்சமும் நியாயமாகாது. மகா பாபமான காரியம். அந்தப் பாபத்தை முதலில் துடைத்துத் தீர்த்துக் கொள்ள வேண்டும். ராமன் நமக்கு என்ன தீங்கு செய்தான்? தண்டகாரண்யத்தில் ராமனால் செய்யப்பட்ட காரியங்களெல்லாம் தன்னையும் தன்னைச் சேர்ந்தவர்களையும் ரக்ஷித்துக் கொள்ளத்தானே நடந்தன? அவனைக் கொல்ல வந்தவர்கள் பேரில்தான் அவன் யுத்தம் செய்து அவர்களைக் கொன்றான். அவன் மனைவியை அபகரித்து வர இவை எப்படிக் காரணமாகும். அவன் மேல் நமக்குக் கோபமிருந்தால் அவனை நாம் எதிர்த்து யுத்தம் செய்திருக்க வேண்டும். அதை விட்டு விட்டு அவர்கள் இல்லாத சமயம் பார்த்து, சீதையைத் தூக்கி வந்தது பாபமாகும்.

''நம் பேரில் குற்றமிருக்க நாம் முதலில் தண்டோபாயம் கையாளுவது சரியல்ல. ராமனுடைய பலத்தை நாம் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். அவன் சேனா பலத்தையும் சரியாகத் தெரிந்து கொள்ள வேண்டும். ஹனுமானுடைய பலத்தையும், சாமர்த்தியத்தையும் கண்டோம். அவனைப் பற்றி அலட்சியமாகப் பேசுவதில் பயனில்லை. அவன் செயல்களைக் கண்டு யாரே அதிசயப்படாதிருப்பார்? நம்முடைய பலம் பெரிதாயினும் எதிரியின் பலத்தோடு ஒத்துப் பார்த்தே யுத்தம் செய்யலாமா அல்லது யுத்தமில்லாமல் தீர்த்துக் கொள்ளுவது நலமா என்பதைத் தீர்மானிக்க வேண்டும். சீதையை முதலில் திருப்பித் தந்து விட வேண்டியது அவசியம். இதுவே என்னுடைய யோசனை. லங்கையை ராமனும் வானரர்களும் தாக்குவதற்கு முன் சீதையைத் திருப்பித் தந்து விடுவீர். அண்ணா! உமக்கு நான் ஹிதத்தைச் சொல்லுகிறேன். உம்முடைய நன்மைக்காகச் சொல்லுகிறேன். கோபித்துக் கொள்ள வேண்டாம். செய்த தவற்றை முதலில் திருத்திக் கொண்டு, பிறகு மற்ற யோசனை செய்யலாம்'' என்று கைகூப்பி வணங்கி விபீஷணன் தன் தமையனான அரசனைப் பணிவுடன் வேண்டிக் கொண்டான்.

முதலில் தன்னுடைய மந்திரிகளும் சேனாபதிகளும் பேசிய வீரப் பேச்சுகளைக் கேட்டு மகிழ்ச்சியடைந்த போதிலும் ராவணனுடைய மனத்தில் சந்தேகம் இருந்து கொண்டேயிருந்தது. எனவே,



ராஜாஜி

விபீஷணன் பேசியதைக் கேட்ட பிறகு, ''மறுநாள் திரும்பக் கூடி யோசிக்கலாம்'' என்று சபையை ஒத்திப் போட்டு அந்தப்புரம் சென்றான்.

## 79. மந்திராலோசனை

மறுநாட் காலை எழுந்ததும் விபீஷணன் அரசனிடம் போனான். தனக்குள் விஷயத்தை மறுபடியும் நன்றாக யோசித்து முடிவு செய்து கொண்டு சென்றான். அண்ணனுடைய நன்மையைக் கருதி அவனை எப்படியாவது திருத்திக் காப்பாற்ற வேண்டும் என்று எண்ணிச் சென்றான்.

எப்போதும் போல் ராஜமாளிகை எல்லாவித செல்வமும் லக்ஷணமும் பூஜைகளும் நிறைந்து விளங்கிற்று. ஆயுதங்களும் கவசங்களும் பூண்ட வீரர்கள், ஆபரணங்கள் பூண்ட பணிவிடை ஸ்திரீகள் எங்கே பார்த்தாலும் நின்றார்கள். பிராமணர்கள் வேத கோஷம் செய்து கொண்டிருந்தார்கள். வாத்தியக்காரர்கள் சுப்பிரபாத வாத்தியம் வாசித்துக் கொண்டிருந்தார்கள். இப்படி மங்கள நாதம் நிறைந்த ராக்ஷச வேந்தனுடைய அரண்மனைக்குள் விபீஷணன் மிக்க கவலையுடன் பிரவேசித்தான்.

அரசன் முன் கை கூப்பிய வண்ணம் நின்றான். முக்கிய மந்திரிகளைத் தவிர மற்றவர்களை வெளியே போகச் சொல்லி ராவணன் தன் தம்பியைப் பேசச் சொன்னான்.

''அண்ணனே! நான் சொல்லுவதில் பிசகு இருந்தால் மன்னிக்க வேண்டும். என்னுடைய லாபத்துக்காக நான் ஏதும் பேசவில்லை. உம்முடைய நன்மை ஒன்றையே கருதிப் பேசுகிறேன். நான் சொல்லுவதைக் கேட்டு ஆலோசித்துக் காரியங்களைச் செய்யக் கோருகிறேன்'' என்று ஆரம்பித்தான்.

''சீதையை நீர் கொண்டு வந்தது முதற்கொண்டு லங்கா நகரத்தில் நானும் மற்றவர்களும் அபசகுனங்களையே காண்கிறோம். ஹோமாக்கினி வளர்க்கும் போது எரிய வேண்டிய முறையில் எரியவில்லை. சரியான மந்திரங்களுடன் அவி சொரிந்தாலும் அக்கினி மூள்வதில்லை. பூஜை ஸ்தலங்களில் பாம்புகள் காணப்படுகின்றன. நைவேத்தியச் சாமான்களில் எறும்பு மொய்க்கிறது. பசுக்கள் பால் சரியாகச் சுரப்பதில்லை. யானைகள், குதிரைகள், ஒட்டகங்கள், கோவேறு கழுதைகள் இவை ஆரோக்கியமிழந்து சரியாக உண்ணாமலும் விபரீதமாகவும் நடந்து கொள்கின்றன. வைத்தியம் பலிக்கவில்லை. காக்கைகள் நகரத்து விமானங்கள் மேல் கூட்டம் கூட்டமாக உட்கார்ந்து அவலக்ஷணமாகக் கத்துகின்றன. கழுகுகளும் வட்டமிட்டுக் கொண்டு சகுனக் குறிகள் அறிந்தவர்களுக்குக் கவலை உண்டாக்கி வருகின்றன. நரிகள் ஊருக்குள் பிரவேசித்து அகாலங்களில் ஊளையிடுகின்றன. காட்டு மிருகங்கள் நகரத்துக்குள் நடமாடுகின்றன. இவையெல்லாம் நமக்கு மிகப் பெரும் அபாயமும் நஷ்டமும் குறிக்கின்றன. இதை நாம் அலட்சியம் செய்யக் கூடாது. சீதையைத் திருப்பி அனுப்பி விடுவீர். அவளைக் கொண்டு வந்தது முதல் இந்தக் கெட்ட குறிகள் காணப்படுகின்றன. மற்றவர்களையும் விசாரித்துப் பார்ப்பீர், நான் சொல்லும் அவலக்ஷணக் குறிகள் நிகழ்ந்தது உண்மையா இல்லையா என்று. நான் சொல்லுவதை ஏற்றுக் கொள்ள முடியாது என்று தீர்மானித்தாலும் என் பேரில் கோபித்துக் கொள்ள வேண்டாம்.

''வீணாக விரோதத்தைச் சம்பாதிப்பதில் பயனில்லை. சீதையைத் திருப்பித் தந்து விட்டு சுகமாக இருப்போம்'' என்று மிகப் பணிவுடன் சொன்னான்.

''ஒரு நாளும் முடியாது! சீதையைத் திருப்பித் தரும் பேச்சுப் பேச வேண்டாம். இந்த எதிரியை நான் பெரிதாகப் பொருட்படுத்தவில்லை. நமக்கு ஒரு பயத்தையும் நான் காணவில்லை. நீ போகலாம்!'' என்றான் ராவணன்.

(தொடரும்)

உ

# ஆலயத்திருப்பணி

## ஆன்மீக அன்பர்களுக்கு ஒரு வேண்டுகோள்

சோழ நாட்டின் பல புராதன ஸ்தலங்களில் ஒன்றான மாபுரம் என்றும் மாத்தூர் கிராமம், பில்வாரண்யக்ஷேத்திரம், கண்வ மகரிஷி தவம் செய்த புண்யஸ்தலம், நாகை மாவட்டம், தரங்கம்பாடி வட்டம், திருக்கடையூர், ஆக்கூருக்கு அருகில் அமைந்துள்ளது. ஸ்ரீ பூர்ண புஷ்களாம்பாள் சமேதராக அருள் பாலிக்கும் ஸ்ரீ பனிச்சரயப்பர் என்கிற மகா சாஸ்தா ஆலயம் ஸ்ரீ காஞ்சி காமகோடி பீடம் பரமாச்சார்யாள் அனுக்ரஹத்துடன், பொது மக்கள் பேராதர வுடன் திருப்பணி தொடங்கி நடந்துவருகிறது. நிகழும் பவ வருஷம் வைகாசி/ஆனி மாதத்தில் மகா கும்பாபிஷேகம் நடைபெற உத்தேசித்துள்ளது. பக்த கோடிகள் அனைவரும் தங்களால் இயன்ற பணம், பொருள் உதவிகளை கீழ்கண்ட விலாசத்திற்கு அனுப்பி ஸ்ரீ சாஸ்தாவின் அருளுக்கு பாத்திரர் களாகும்படி வேண்டுகிறோம்.

இங்ஙனம்,

V.கோபாலன்

(பொருளாளர், ஸ்ரீ மாத்தூர் சாஸ்தா பரிபாலன சபா)

13, லஸ் அவின்யூ மைலாப்பூர், சென்னை - 4

ஆர்.நாகராஜன்

தலைவர்



✱ உழைப்புக் கலாசாரம்

● மங்கதேவன், பம்பாய்.

? தமது உடலையே நல்ல காரியத்துக்குத் தானம் செய்து மறைந்த கிர்லோஸ்கர் பற்றி...?

! அவரது சாதனைகளிலேயே மிகவும் சாதாரணமானது இதுதான். எத்தனை எத்தனை தொழிலகங்கள்! எத்தனை ஆயிரம் வேலை வாய்ப்புகள்! 'நான் செத்துப் போய்விட்டால் அதைச் சாக்கிட்டு விடுமுறை கோராதீர்கள்; வழக்கத்தை விடக் கடுமையாக உழையுங்கள்' என்பது எவ்வளவு உன்னதமான அறிவுரை! ''பேசிப் பேசி காலம் கடத்தாதீர்கள்; செயலில் இறங்குங்கள். என்ன செய்கிறீர்கள் என்பதைவிட எப்படிச் செய்கிறீர்கள் என்பது முக்கியம். நீங்கள் ஒரு ஓட்டல் சர்வராக இருக்கலாம்; ஆனால் நீங்கள் நடந்து கொள்ளும் முறையால் அந்த ஓட்டலில் வாடிக்கையாளர்கள் நிரம்பி வழியச் செய்ய முடியும்! என்னைப் பாராட்ட வேண்டுமா? சிலை வைக்காதீர்கள்! இன்றும் என்றும் நேர்த்தியாகக் கடமையாற்றி, நாட்டை மேம்படுத்துங்கள்.'' தமது ஊழியர்களிடம் அவர் வளர்த்த உழைப்புக் கலாசாரம் இது.

# 'ஜெ'.டீ.வி.

● ஸ்ரீவித்யா காளிதாஸ், சிதம்பரம்

? 'மகராசி ஆட்சியிலே மாதமெல்லாம் மழை' என அமைச்சர் நடேசன் பால்ராஜ் கூறியுள்ளாரே?

! யார் காட்டிலே என்று புரிந்து கொண்டால் சரி.

● என்.சண்முகம், திருவண்ணாமலை.

? எம்.எஸ்.சுப்புலட்சுமிக்கு லதா மங்கேஷ்கர் விருது வழங்கப்படுவது குறித்து?

! அது லதா மங்கேஷ்கர் விருது அல்ல; லதா, தமது தகப்பனார் - இசை அறிஞர் - தீனநாத் பெயரால் வழங்கும் விருது. அதற்கு 'தீனநாத் விருது' என்றுதான் பெயர். எம்.எஸ். ஸுக்கு விருதுகள் இனி அதிகப்படி கௌரவத்தை அளித்துவிடப் போவதில்லை என்றாலும் சக பாடகி செய்யும் மரியாதை என்ற அளவில் தனித்தன்மையும் சிறப்பும் இதற்கு உண்டு.

● எம்.சம்பத், வேலாயுதம்பாளையம்.

? 'கள்ளச் சாராயமே இல்லாத தொகுதி' என்று பர்கூர் எம்.எல்.ஏ. ஜெயலலிதாவுக்குத் தமிழக அரசு விருது வழங்கியுள்ளதே?



✱ உணர்வினால் கல்வீச்சு

! பர்கூரை அப்படி கருத முடியாது என்று ராஜாராம் எதிர்ப்புத் தெரிவித்திருப்பது ஒரு புறமிருக்க, மற்ற தொகுதிகளில் கள்ளச் சாராயம் பெருக்கெடுப்பதற்கு இந்த விருது ஓர் ஒப்புதல் வாக்குமூலம் ஆகிறதே!

● ஆர்.ஜேஸ்மின் ரமேஷ், கம்பம்.

? சட்ட சபையில் அ.தி.மு.க., எம்.எல்.ஏ. பொன்னுவேலு முதல்வரைப் புகழ்ந்து சினிமா மெட்டில் பாட்டுப் பாடினாராமே?

! கொஞ்சம் பொறுங்கள்; பாட்டோடு மைக்கேல் ஜாக்ஸன் ஸ்டைலில் டான்ஸ் ஆடியே பாராட்டுவார். சட்ட மன்றத்தில் சங்கடமான கேள்விகளுக்குத்தான் தடை.. ஆட்டம் பாட்டத்துக்கு அல்ல.

● ஆர்.ராஜதுரை, சீர்காழி

? பீகார் மாநிலம் தீவிரவாதிகளின் கூடாரமாக



✱ 'ஜெ' மலர்

மாறி வருவது பற்றி?

! போலீஸ் ஸ்டேஷனையே அங்கே அரசியல்வாதிகள் குத்தகைக்கு விட்டு விடுகிறார்களாம். அப்புறம் சட்டம் ஒழுங்காவது ஒன்றாவது. குண்டர்கள் ராஜ்யம்தான்.

● எஸ். பாலாஜி, ஏழுகிணறு.

? தமிழக சட்டசபையில் ''ஜெய் ஹிந்த்'', ''வந்தே மாதரம்'' என்ற வாக்கியங்களை உதிர்க்க வேண்டாம் என்று துணை சபாநாயகர் கூறியுள்ளாராமே?

! அதற்குப் பதில் ''ஜெய் ஜயா'' என்று கூறிவிடலாமே? தடை ஏதும் வரவே வராது!

● எஸ்.அருள்மொழி, காட்டூர்.

? 'தற்கொலை முயற்சி தண்டனைக்குரிய குற்றமல்ல' என்று உச்ச நீதிமன்றம் உரைத்துள்ளது பற்றி...?

# தொடங்கப்பட இருப்பது பற்றி?


* ஒட்டாத ஃபெவிகால்

! இதில் பல அம்சங்கள் உள்ளன. மனநோய் காரணமாகத் தற்கொலை; வாழ்க்கையில் ஏற்பட்ட ஏமாற்றம் காரணமாக; தலைவருக்கு ஏற்பட்ட துயர் காரணமாகத் தீக்குளிப்பு; காதல் தோல்வி அல்லது தீராத நோய் காரணமாக என்று பல ரகம். கொலையைத் தற்கொலை போலத் தோன்ற வைக்கும் ரகம் வேறு! உதாரணம்: ஸ்டவ் வெடிப்பு. தற்கொலை முயற்சி குற்றமாக்கப்படும் போதுதான் ஏன் அந்த முயற்சி நடந்தது என்று ஆராயப் புகுந்து சமுதாயம் படிப்பினை பெற முடியும். தண்டனைக்குரிய குற்றமல்ல என்று ஆகிவிட்டால் போலீஸார் தற்கொலை, தற்கொலை முயற்சி ஆகிய எதையுமே ஆய்வு செய்வதை விட்டு விடுவார்கள். இதில் நன்மையை விட தீமையே அதிகம் என்பது அடியேன் கருத்து. மாற்றுக் கருத்துக் கொண்டுள்ளமைக்காக மாண்பமை நீதிபதிகள் எளியேனைப் பொறுத்தருள்வார்களாக!

● சி.ஜெகஜோதி, சேது நாராயணபுரம்.

**? முதல்வருக்காகக் கண் திருஷ்டி கழிவதற்கு பஞ்ச கல்யாணி ஓட்டப்பந்தயம் நடத்தப்பட்டது குறித்து?**

! திருஷ்டி படுகிற அளவுக்கு இங்கு அப்படி என்ன சாதனை நிகழ்ந்து விட்டது என்பது தான் புரியவில்லை.

● ஆர்.ஏ.வளர்மதி, கொடிமங்கலம்.

**? "பஸ்மறியல், கல்வீச்சு ஆகியவற்றை ஓர் உணர்வினால் நடத்துகிறோம்; திட்டமிட்டுச் செய்யவில்லை" என்று ராமதாஸ் கூறியுள்ளது பற்றி?**

! பொறுப்புள்ள தலைவரின் கூற்றாக இதனை ஏற்க முடியாது. "உணர்ச்சி வசப்பட்டு இதுபோன்ற காரியங்களைச் செய்யாதீர்கள்" என்றுதான் ஒரு தலைவர் கூற வேண்டுமே தவிர, ராமதாஸைப் போல் உணர்ச்சிகளைத் தூண்டி விடுதல் கூடாது.

● என்.கே. ஈசுவரி, பெங்களூர்.

**? 'சினிமாவைப் பார்த்துக் கெட்டுப்போனேன்' என்று சொல்கிறார்களே தவிர 'சினிமா பார்த்துத் திருந்தினேன்' என்று யாரும் சொல்லக் காணோமே?**

! அட, திருந்த வேண்டாம் ஸிஸ்டர். குறைந்த பட்சம் கெட்டுப்போக வாய்ப்பில்லாத வகையிலாவது சினிமா எடுக்கலாம் இல்லையா? ஆனால் சினிமா பார்க்கா விட்


* 'மகராசி ஆட்சியில்...'

டாலும் சினிமா பாட்டைக் கேட்டே கூடக் கெட்டுப் போகும் காலமாயிருக்கிறதே இன்று!

● தென்றல் கார்த்தி, நாட்டரசன் கோட்டை.

**? தமிழ் நாட்டுக்கு என்று ஜெயலலிதா பெயரில் தனி டீவி தொடங்கப் பரிசீலித்து வருவதாக அமைச்சர் தென்னவன் அறிவித்துள்ளாரே?**

! அ.தி.மு.க. கட்சியின் மறைமுக ஆதரவுடன் தனியார் யாரும் தொடங்கினால் தடுக்க முடியாது. ஆனால் தமிழக அரசே தொடங்கினால் மத்திய அரசு அனுமதிக்காது. தூர்தர்ஷன் மூலம் பிரசாரம், மத்தியில் ஆளும் கட்சியின் ஏக போக உரிமையாக இன்று உள்ளது. அதை விட்டுக் கொடுக்க மாட்டார்கள்.

● எஸ்.முகமது மீரான், சென்னை-52 ❑

**? கத்தி காட்டி மிரட்டி பணம் பறிக்கும் செயல் தொடர் கதையாக இங்கு இருக்கக் காரணம் என்ன?**

! கத்தி காட்டாமல் பணம் திரட்டும் செயல் மேல் மட்டத்தில் நடக்கும்போது அடிமட்டத்தில், 'நாமும் கொள்ளையடித்தால் என்ன?' என்ற எண்ணம் எழுவது இயல்பு. இதையெல்லாம் நடக்காமல் தடுக்க வேண்டிய போலீஸ் இலாகா தார்மீக பலம் இழந்து நிற்கிறது. போலீஸைத் தட்டிக் கேட்கும் திராணி தலைமைக்கு இல்லாது போனது. அரசன் எவ்வழி...

● தேனம்மாள் ராமசாமி, ஸ்ரீவில்லிபுத்தூர்.

**? வை.கோ. அணியையும் மு.க.அணியையும் கி.வீரமணி இணைத்து வைக்க முயற்சி செய்யப் போகிறாராமே?**

! அதற்குரிய ஃபெவிகால் இன்னும் கண்டுபிடிக்கப்படவில்லை.

● என்.ஆறுமுகம், பரமக்குடி.

**? ரயில்வே அமைச்சர் ஜாபர் ஷெரீஃப் தமது இலாகாவுக்கென்று ஒரு தனி விமானம் வாங்கப் போகிறாராமே?**

! என்ன செய்ய, அவருக்கே ரயில் பயணத்தில் நம்பிக்கை இல்லையே.

❑ ரூ.25 பரிசு பெறுபவர்:
எஸ்.முகமது மீரான்,
11, மார்த்தம்மன் கோயில் தெரு,
ரெட்ஹில்ஸ், சென்னை - 52.



* உற்சவர் நடராஜர்



கிளிகளால் ஈசனை வழிபட முடியுமா? முடிந்திருக்கிறது சேலத்தில்!

# கிளிகள் வணங்கிய ஈசன்!



ஒரு சமயம் வியாசகுமாரனாகிய சுக முனிவர், பிரும்ம தேவனின் சாபத்துக்கு ஆளாகி, கிளியாகப் பிறக்கிறார். மணிமுத்தாற்றில் தினமும் நீராடி, நாற்றிசையும் பறந்து சென்று, தானியங்களையும் கனிகளையும் எடுத்து வந்து இறைவனுக்குப் படைத்து வந்தது அந்தக் கிளி.... தனியாக இல்லை ஒரு கிளிக் கூட்டத்தோடுதான்!

விவரமறியாத வேடன் ஒருவன் கல்லெறிந்து, கிளிக் கூட்டத்தைக் கலைக்கிறான். தலைவன் கிளியான சுகமுனிவர், தம் இறக்கைகளை விரித்து, வேடன் எறிந்த கல்லிலிருந்து ஈசனைக் காப்பாற்ற முயல்கிறார். வேடன் சுகமுனிவரான கிளியை வெட்ட, அது அங்கேயே உயிர் விடுகிறது. வெட்டிய போது ஈசன் திருமுடியிலும் காயம் பட்டுக் குருதி பெருகுகிறது.

சிவபெருமானுக்குத் தான் இழைத்த துன்பம் உணர்ந்து, வேடன் தன்னுயிரை மாய்த்துக் கொள்கிறான். சுகமுனிவர், தம் பெயரால் தலமும் மூர்த்தியும் விளங்க வேண்டுமெனப் பிரார்த்தித்து மற்ற கிளிகளோடு கயிலைப் பதவியடைகிறார்.

இக் கதை நிகழ்ந்த தலம்தான் சுகவனம்.

# கமலமணிராஜன்

இறைவன் சுகவனேசுவரர்; கிளிவனநாதர். இறைவியின் திருநாமம் பச்சை வண்ண நாயகி. முதலில் மரகதவல்லி என்று வழங்கப்பட்டு இப்போது சுவர்ணாம்பிகையாக அருள்பாலிக்கிறாள்.

மிகவும் பழைமையான ஆலயம் இது. ஆயிரம் ஆண்டுகள் முதல் எழுநூறு ஆண்டுகளுக்கு முன் வரை பல அரசர்களும் வழங்கிய நந்தா விளக்கு, தூண்கள், பொன் கொடைகள் போன்றவற்றுக்கான கல்வெட்டு ஆதாரங்கள் நிறையவே உண்டு.

சுந்தர மூர்த்தி சுவாமிகளின் தோழரான சேரமான் ஆண்ட சேரசைலம்தான் சேரராஜன் மலை என்றும் சேர்வராயன் மலை என்றும் மருவியது. (ஏர்க்காடு அமைந்துள்ள மலைத்தொடர்.) சேரன் அரசோச்சிய தலைநகரம் சேரலம். அது மருவிச் சேலம் ஆயிற்று என்கிறார்கள்.

சுகவனேசுவரர் திருக்கோவிலுக்கு நாம் சென்றிருந்த போது, இனிமையான நாதசுரம் முழங்க, அம்பிகையின் கருவறை உருவத்துக்கு அலங்காரங்கள் நிகழ்ந்து கொண்டிருந்தன. கூடை கூடையாக வண்ண நறுமண மலர்கள், மூடியிருந்த திரைச் சீலைக்கு உட்புறம் வாங்கப்பட்டு, வெற்றுக் கூடைகள் சாரிசாரியாக வந்து கொண்டிருந்தன. ஏறக்குறைய முக்கால் மணி நேர அலங்காரம்.

பல்விதமான இசைக்கருவிகளின் முழக்கத்தோடு, திரைவிலகுவதும் அடுக்குக் கோபுரமாய் தீப ஆராதனை தொடங்குவதும் ''ஓம்'' என்று முழங்க வைக்கும் சிலிர்ப்பு. வண்ண நறுமண மலர்களின் ஒப்பனையில் அம்பிகையின் திருமேனி காட்சி தரும் அழகே அழகு.

சுகவனேசுவரர சந்நிதிக்கு எதிரே மிக அருமையான வேலைப்பாட்டோடு கூடிய ஆதிருதி மிருக்க நந்தி; மண்டபம். பிரதோஷத்தன்று இந்த நந்திக்குப் பாலபிஷேகம், சங்காபிஷேகம் சிறப்பாக நடக்கும். திருவாதிரை அன்று நடராசப் பெருமானின் வீதியுலா குறிப்பிடப்பட வேண்டியது, காலை ஒன்பது மணிக்குத் தொடங்கி, இரவு பத்து மணிவரை ஆகுமாம்! வைகாசி விசாகத்தில் தேர்த்திருவிழா. பௌர்ணமி நாட்களில் அம்பிகையின் 'திருமேனிக்குச் செய்யப்படும்' முத்தங்கி அலங்காரம் எளிமையும் அழகும் கூடியது.

நவ கிரகங்களில் இங்கே ஒரு தனிச் சிறப்பு, வழக்கமாக இராகு உள்ள இடத்தில் செவ்வாயும், செவ்வாய் உள்ள இடத்தில் இராகுவும் மாறியிருக்கிறார்கள். இந்த நவக்கிரக ஆராதனையின் பலன் களத்ர தோஷ நிவர்த்தி என்கிறார் அர்ச்சகர். கன்னிப் பெண்கள் திருமணம் விரைவில் கைகூட அருள்பாலிக்கும் கிரகங்கள் இவை.

பூர்ணமான அமைப்பில் வள்ளி தேவயானையோடு கோவில் கொண்டிருக்கிறார் சுகவன சுப்ரமணியர். இந்த உட்கோவிலைச் சுற்றிச் சுவர்களின் வெளிப்புறங்களில் ஆறு படை வீடுகளின் முருகத் திருவுருவங்கள் அற்புதமாக வடிக்கப்பட்டிருக்கின்றன.

தமிழ்க் கிழவி ஔவையின் வேண்டுகோளை ஏற்றுத் தம் துதிக்கையால் அவரைக் கைலாயம் கொண்டு போய்ச் சேர்த்த விநாயகர், இங்கே வலம்புரி விநாயகராக அருள்பாலிக்கிறார்.

மேற்புற மதிற்சுவரை ஒட்டி பஞ்சபூத லிங்கங்களும் சரஸ்வதி, கஜலக்ஷ்மியும் காட்சி தருகிறார்கள். வீணாதாரிணியான சரஸ்வதி தேவியின் சிற்பம் மிகவும் அழகு. இங்கே துர்க்கைக்கு ராகுகால வழிபாடு மிகவும் சிறப்பானது. வேறு பல சிலைகளும் அணி செய்கின்றன.

விஸ்தாரமான இடமில்லாவிட்டாலும் இருக்கிற இடத்தில் நெருக்கடி இல்லாமல் எல்லா மூர்த்தங்களுக்கும் சிற்ப சௌந்தர்யங்களுக்கும் இடமளித்துள்ள கட்டடக் கலை பிரமிப்பூட்டக் கூடியது.

ஆதிசேடன் நீராடியதாகச் சொல்லப்படுகிற திருக்குளம் ஒன்று, ஆலயம் விரிவுபடுத்தப்பட்டதால் குறுகிச் சிறு கிணறாகவே ஆகிவிட்டது. ஆதிசேடன் இருந்தால் தவளைகள் எப்படியிருக்கும்? தவளைகள் இல்லாத குளம் என்பதால் 'அமண்டூகத் தீர்த்தம்' என்றே அது வழங்கப்படுகிறது.

தரிசிக்க வேண்டிய திருத்தலமாக இருப்பதோடு பின்பற்றப்பட வேண்டிய சிறந்த நடைமுறைகள் கொண்ட ஆலயமாகவும் இருக்கிறது சேலம் சுகவனேசுவரர் திருக்கோவில்!

படங்கள் : யெஸ்பால்






**சூ**ல்லணையில் தற்போது ''கிலேப்பி'' ரக மீன்கள், ஏராளமாய் இறந்து மிதக்கின்றன. இதனால் ஆற்று நீர் மிகவும் மாசுபட்டுள்ளது. சுற்றுப்புற கிராம மக்கள் இந்த மீன்களை அள்ளிக் கொண்டு போய் உணவாகப் பயன்படுத்துகின்றனர். இதனால் அவர்களுக்கு ஏதேனும் நோய்கள் உண்டாக வாய்ப்பும் இருக்கலாம்.

கூகூர், கு.பெரியசாமி.

**மா**மல்லபுரத்தில் பெரிய டாக்டர் ராமதாஸ் ஐந்து கட்டளையிட்டுள்ளார்.

1. தினமலர் பிரதிகளைக் காசு கொடுக்காமல் வாங்கிக் கொளுத்துக.

2. ஒவ்வொரு வன்னிய கிராமத்திலும் 50 வாலிபர்கள் அரிவாளுடன் 24 மணிநேரமும் தயார் நிலையிலிருந்து, போலீஸ் வந்தால் கை கால்களை வெட்டுக.

3. பிற்பட்டவர்களுக்கு 20% வேலையளித்த தகவல் தரமறுக்கும் நிறுவனங்களில் கூட்டமாகப் புகுந்து விவரங்களைக் கைப்பற்றுக.

4. மூன்று பல்கலைக் கழகங்களில் வன்னியரல்லாத வரைத் துணை வேந்தராக்கினால் அவர்களைத் நீக்குவிப்பாட்டுக.

5. வன்னியர்களுக்குத் தனி ஒதுக்கீடு தர அரசு மறுத்தால் அதிகாரிகளைக் கடத்துக.

இது மென் மேலும் பஞ்சாப்களையும், காஷ்மீர் களையும் உண்டாக்கும் விபரீத முயற்சியாகத் தோன்றுகிறது. மாநில அரசு மட்டுமல்ல, மத்திய அரசும் இவரின் ஐந்து கட்டளைகளைப் பற்றி தீவிர கவனம் செலுத்தித் துரித நடவடிக்கை எடுக்க வேண்டும்.

திருபுவனம், வை.குஞ்சிதபாதம்.

**வா**ர வாரத் தமிழ் சினிமா பாடல் காட்சிகளின் தரம் கவலை தருவதாய் உள்ளது. 'வீரா', 'ஹானஸ்ட் ராஜ்' இரண்டும் நம் மனதில் கௌரவமான இடம் பிடித்திருக்கும் நாயகர்களின் படங்கள். இதில் கதாநாயக, நாயகியர் ஆடும் (!) காட்சிகள் 'ப்ரோனோ' வகையில் ஒதுக்கப்பட வேண்டியவை. இப்பாடல்களை டீவியில், கடமை தவறாமல், 'சூப்பர் ஹிட்' 'புதுப்பாடல்' 'பிலிப்ஸ் டென்', 'ஒலியும் ஒளியும்' என்று பல பெயர்களில் வீட்டுக்குள் கொணர்ந்து நாறடிப்பது பெரும் சோகம். 'மலரும் மொட்டும்' என்கிற குழந்தைகள் நிகழ்ச்சியில் கூட சிறார்களைச் 'சித்தெறும்பு கடிக்குது' பாடலை ஒலித்து ஆடச் சொல்லி, 'மார்க்' போடுகிறார்கள்!

அரசியல், பொருளாதாரம், சுற்றுச் சூழல், ஒருமைப்பாடு எல்லாவற்றையும் சுயநலத்தால் நாசம் செய்து, எதிர்காலச் சந்ததிக்கு நல்ல முறையில் காப்பாற்றித்தர இயலாதவர்களாகி விட்டோம். கலாசார நாகரிகத்தை மட்டும் விட்டு வைப்பானேன் என்று எண்ணமோ!

சென்னை - 24, உஷா தேவி.

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் : வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர்: வி. வைத்தியநாதன். ஆசிரியர் : சீதா ரவி. நிர்வாக ஆசிரியர் : கி. ராஜேந்திரன்.
முகவரி : 47, ஜவாஹர்லால் நேரு சாலை, ஈக்காடுதாங்கல், சென்னை - 600 097. தொலைபேசி - ஆசிரியர் குழு அலுவலகம் : 2345624; சர்க்குலேஷன் மானேஜர் : 2345623; விளம்பரம் - சந்தா : 2345622; டைரக்டர் : 2345621.
ஆண்டுச் சந்தா - உள்நாடு : ரூ. 156/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 400/-; விமானத் தபால் ரூ. 1050/-.
ஆறு மாதச் சந்தா - உள்நாடு : ரூ. 78/-; வெளிநாடு - கப்பல் தபால் : ரூ. 200/-; விமானத் தபால் ரூ. 525/-.

# குடும்பத் தலைவிகளே! உங்களில் பலருக்கு விரைவாக வளர்ந்து பெருகும் ஒரு டெபாசிட் திட்டம் அவசியம் என்பது தெரியுமா?



அதனால்தான் தொழில் முறையில் ஒரு நிதி நிறுவனத்தை நிர்வகித்துச் சிறந்த அனுபவம் பெற்றுள்ள நாங்கள் **சுபநிதியைத்** தொடங்கியிருக்கிறோம். விரைவாக வளர்ந்து பெருகும் இரண்டு வாய்ப்புகளை இந்த டெபாசிட் திட்டம் உங்களுக்கு அளிக்கிறது. நீங்கள் ரூ.6,000/-, ரூ.10,000/- ஆகிய தொகைகளை டெபாசிட் செய்யும்போது ஏழே ஆண்டுகளில் அவை முறையே ரூ.22,100/- ஆகவும், ரூ.36,780/- ஆகவும் பெருகி விடுகின்றன. இன்றே எங்களுடன் தொடர்பு கொள்ளுங்கள். உங்களுடைய பல்வேறு பிரச்னைகளை நீங்கள் மிக எளிதாகச் சமாளித்துவிட முடியும் என்பதைத் தெரிந்து கொள்வீர்கள்.

**SHUBA NIDHI**

**HOUSEWIVES' FAST GROWTH DEPOSIT SCHEME**

எக்ஸிக்யூட்டிவ் பிரஸிடெண்ட் : **P.G. சரண்யன்,** முன்னாள் தலைவர், கரூர் வைஸ்யா பாங்க் லிட்.

## RPS BENEFIT FUND LTD

(Declared as "NIDHI" by the Central Government)

**தலைமை அலுவலகம்:** 16, இராமநாதன் தெரு, தி. நகர், சென்னை-17. போன்: 441554, 441346.

**கிளைகள்:** இராயபுரம் (சென்னை) போன்: 556164, கோயம்புத்தூர் - போன்: 43576, பெங்களூர் - போன்: 366433, பாண்டிச்சேரி - போன்: 31859.

உறுப்பினர்களுக்கு மட்டும்.

**பாதுகாப்பான வழியில் விரைவான வளர்ச்சி**

AKSHAR RPS/94 37

REGISTERED NO. M. 4392
Registered as Newspaper in Srilanka